# அம்புலிமாமா



மதிமுகம் : 104 மே : 2001 புன்னகை : 5

## பொருளடக்கம்



### சிறப்புப் படைப்பாக



சரியான முடிவு (வேதாளம் சொல்லும் கதை)

மாயாஜால மலை





கொள்கையைக் கைவிடாதே

இந்தியப் பண்பாடு - வரலாறு



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, No.82, Defence Officers Colony, Ekkattuthangal, Chennai - 600 097. Editor: Viswam



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# நம் துயரை அவர்களும் உணர்ந்தனர்

குஜராத்தில் நாசகார பூகம்பம் ஏற்பட்ட நாளன்று நாட்டின் மற்ற இடங்களில் குடியரசு தினம் கொண்டாடப்பட்டுக் கொண்டிருந்தது. இத்துடிதுடிக்கும் செய்தியைக் கேட்டதும், நாட்டின் ஒவ்வொரு பகுதியும் தன்னாலான எல்லா உதவிகளையும் செய்யலாயிற்று. ஆம். எல்லோரும் இந்தியத் தாயின் மக்கள் தாமே.

இச்சமயத்தில் நம் நாட்டவரின் மனதை மிகவும் நெகிழ வைத்தது அன்னிய நாடுகள் குஜராத் மக்களுக்கு உடனடியாக நிவாரணம் அளிக்க முன்வந்தது தான். அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ்ஷும் இங்கிலாந்துப் பிரதமர் டோனி ப்ளேரும் துயருற்ற குஜராத்திற்கு எல்லா விதத்திலும் உதவுவதாகக் கூறி இருக்கிறார்கள். பாகிஸ்தானின் ஆட்சிப் பொறுப்பிலுள்ள ஜெனரல் முஷ்ராபும், நம் பிரதமர் வாஜ்பாயுடன் தொலை பேசியில் பேசி, ஆறுதல் கூறி அங்குள்ள மக்களுக்கு உதவ சில பொருள்களையும் அனுப்பினார்.

இவ்வாறு எவ்வளவோ நாடுகள் உதவிக் கொண்டு வருகின்றன. ஜப்பானில் டோக்கியோவிலுள்ள சிறு பள்ளி ஒன்றின் பன்னிரண்டு வயது மாணவி இசோனா ககூசியின் செயல் மறக்க முடியாததாகும். அவள் தான் உண்டியலில் சிறுகச் சிறுகச் சேமித்து வைத்த காசுகளையும், தன் சக மாணவ, மாணவிகள் உண்டியல்களில் சேர்த்த காசுகளையும் ஒன்று சேர்த்துத் தன் வகுப்பு ஆசிரியையிடம் கொடுத்து, அத் தொகையை குஜராத் மக்களின் துயர் துடைக்க அனுப்பும்படி வேண்டிக் கொண்டிருக்கிறாள். 'உங்கள் துயரை நாங்கள் உணர்கிறோம்.' என அவள் கூறியுள்ளது நம் மனதை நெகிழ வைத்துவிட்டது.

நாமும், நம் 'அம்புலிமாமா' வாசக அன்பர்களும் இது போன்ற உற்ற நண்பர்களின் தக்க உதவிகளுக்காக உளமார நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# செய்திச்  சுரங்கம்

## உள் நாட்டில்

### குஜராத் சுற்றுலாச் செல்வோர் குறைந்தனர்

குஜராத்தை கடந்த ஜனவரி 26ல் ஏற்பட்ட பூகம்பம் மிகவும் உலுக்கி விட்டது. அப்போது ஏற்பட்ட பொருட்சேதத்தோடு தற்போது சுற்றுலா செல்லும் பயணிகள் எண்ணிக்கை அங்கு வருவது குறைந்து, வருமானம் தாழ்ந்து விட்டது. ஒவ்வொரு ஆண்டிலும் குஜராத்தியர் கோடை காலத்தை ஃபிரான்ஸ், அமெரிக்கா போன்ற நாடுகளில் கழிப்பது வழக்கம். தற்போது வருமானம் குறையவே, அவர்கள் அயல்நாடுகளுக்குச் செல்ல முடியவில்லை. இதனால் சுற்றுலாத் துறையில் ஈடுபட்டுள்ளவர்கள் பாடு தான் திண்டாட்டமாக உள்ளது.

### மத்திய பட்ஜெட்- நிறை, குறைகள்



உயர்- தொழிற்கல்வி பெற அயல்நாடு செல்பவர்களுக்கு இந்திய அரசாங்கம் வங்கிகள் வாயிலாக 15 லட்சம் ரூபாய் கடன் பெறவும், உள் நாட்டிலேயே படிப்பதானால் ஏழரை லட்சம் ரூபாய் கடன் பெறவும் வசதி செய்துள்ளது. இதை நிதி அமைச்சர் யஷ்வந்த் சின்ஹா பிப்ரவரி 28 ல் நாடாளும் மன்றத்தில் பட்ஜெட்டை சமர்ப்பித்த போது அறிவித்தார்.

சர்க்கரை விலை ஏற்றத்தால் குழந்தைகள் விரும்பும் சாக்லெட், பிஸ்கட், மற்ற இனிப்புப் பண்டங்களின் விலைகளும் பாதிக்கப்படும். இனிப்புப் பானங்களின் விலை குறைக்கப் படுவதால் அவற்றை இளைஞர்கள் தாராளமாக வாங்கி குடிக்க முடியும். பொம்மைகளின் விலைகளும், காலணிகளின் விலைகளும் குறைக்கப்பட்டிருப்பதால் குழந்தைகளும், சிறுவர் சிறுமியரும் அவற்றை நிறைய வாங்கிக் கொள்ள முடியும்.

தபால் கட்டண உயர்வினால் நண்பர்களுக்கு சிறுவர்கள் கடிதங்கள் எழுதுவது குறையும். புத்தகங்கள், பத்திரிகை தபாலில் அனுப்புவதும், பெறுவதும் பாதிக்கப்படும். போட்டிகளுக்கான அஞ்சல் அட்டை ரூ.4லிருந்து ரூ.5ஆக உயர்த்தப்பட்டுள்ளது. இரு சக்கர மோபெட் போன்றவற்றின் விலைகள் குறைக்கப்பட்டிருப்பதால் இளைஞர்கள் அவற்றை வாங்கி தம் நண்பர்களைச் சந்திக்க வசதியாக இருக்கும்.

### ஒலி உங்கள் நடத்தையை பாதிக்கும்!

உங்களுக்கு படிப்பதிலும், நினைவுபடுத்திக் கொள்வதிலும், படிப்பில் முழுக்கவனம் செலுத்துவதிலும் பிரச்சினை ஏற்படுகிறதா? அப்படியானால், உங்களது சுற்றுப்புறம் எப்படி உள்ளது என்று பாருங்கள். உலக சுகாதார அமைப்பு அண்மையில் நடத்திய ஆய்வின் படி, தொடர்ந்து பலத்த சத்தம் கேட்டுக் கொண்டே இருப்பதால் ரத்த அழுத்தம்,



இதயத்துடிப்பு போன்றவை அதிகரித்து, நீங்கள் செயல்படுவது பாதிக்கப்படலாம்.

அந்த அமைப்பு கூறுகிறபடி பார்த்தால் 80 டிசைபில்களுக்கு மேல் ஒலி அழுத்தம் இருந்தால் மனிதசுபாவம் முரட்டுத்தனமாக மாறக் கூடும் என்றும் சில சமயங்களில் காது கேட்காமல் கூடப் போய்விடும் என்றும் தெரிகிறது.

## அயல் நாட்டில்

### இங்கிலாந்தின் சாம்பியன் ஓர் இந்தியர்!

இங்கிலாந்தின் பாட்மிண்டன் சாம்பியனாக இந்தியரான கோபிசந்த் வந்திருக்கிறார். இவர் பர்மிங் ஹாமில் நடந்த போட்டியில் நேர் செட்களில் சீனாவின் சென் ஹாங்கை வென்றார். கோபிசந்த் தற்போது உலகின் பத்தாவது இட விளையாட்டு



வீரராக உள்ளார். இந்தப் போட்டியில், அரை இறுதி ஆட்டத்தில் உலகின் முதலிட விளையாட்டு வீரரான டென்மார்க்கின், பீடர் கேடை வென்றார். இது போன்ற வெற்றியை 1980ல் பெற்ற இந்தியர் பிரகாஷ் பட்கோனே ''கோபிசந்தின் வெற்றி இந்தியர்கள் முதலிடத்தைப் பெற முடியும் என்பதை உறுதி செய்கிறது. இந்திய பாட்மிண்டன் வரலாற்றில் இது பொன் நாள்'' என அவர் கூறியுள்ளார்.

### பிராட்மெனின் மறைவு

கிரிக்கெட் விளையாட்டிலே உலகிலேயே மாபெரும் வீரர் டான் பிராட்மென். அவர் 6994 ரன்கள் எடுத்தவர். இதன் சராசரி 99.94. இதன் அவர் 52 டெஸ்ட் மேட்ச்களின் இந்த சாதனையைப் புரிந்தவர்.

ஆஸ்திரேலியாவின் நியு சௌத் வேல்ஸிலுள்ள கூடமுன்ட்ரா என்ற ஊரில் 1908 ஆகஸ்ட் 27ல் பிறந்தார். அவர் அவரது பெற்றோரின் ஐந்தாவது குழந்தை. அவரது தந்தை தச்சர். பிராட்மென் தன் பள்ளி நாட்களிலேயே கிரிக்கெட் விளையாட ஆரம்பித்தார். அவர் முதலில் கோல்ஃப் பந்தை எறிந்து அடித்துப் பழகினார். அவர் முதன் முதலாக பிரிஸ்பேனில் 1928ல்



நடந்த மேட்சில் இங்கிலாந்திற்கு எதிராக விளையாடினார். அதிலிருந்து எவ்வளவோ மேட்ச்களில் விளையாடி 28607 ரன்கள் எடுத்தார். இதில் 117 சதங்கள் 338 இன்னிங்ஸில் எடுக்கப் பட்டவை. கிரிக்கெட்டிற்கு ஆற்றிய மாபெரும் பணிக்காக அவருக்கு சர் பட்டம் வழங்கப்பட்டது. அண்மையில் இவர் காலமானதும் உலகமே கண்ணீர் வடித்து வருந்தியது.

### புத்தர் சிலைகள் சேதப்படுத்தப்பட்டன

உலகிலேயே மிக உயரமான, நின்ற நிலையிலிருந்த புத்தர்சிலையும், பாமியான் புத்தர்சிலையும் ஆப்கனிஸ்தானின் தாலிபான்களால் அடித்து அழிக்கப் பட்டன.



தாலிபான் படையினர் விமான எதிர்ப்புத் துப்பாக்கிகளையும், இரும்புத் துண்டுகளையும் பயன்படுத்தி பாமியானிலிருந்த இரு மாபெரும் புத்தர் சிலைகளை அழித்தனர். தாலிபான் என்பது ஆப்கனிஸ்தானின் இஸ்லாமியப்படை. ஆப்கனிஸ்தானின் மூன்றில் இரண்டு பகுதி நிலப்பரப்பு. இவர்கள் வசம் உள்ளது. 1994 லிருந்து இவர்களது கை ஓங்கி உயர்ந்து கொண்டிருக்கிறது.

அந்த அரசாங்கத்தின் தகவல் கலாச்சாரத்துறை அமைச்சரான மௌல்வி குத்ரதுல்லா ஜமால் என்பவர் அம்மாதிரிச் சிலைகள் இருப்பது இஸ்லாமிற்கு விரோதம் என்றும், அதனால் தான் அவற்றை எல்லாம் தம் நாடு அழிப்பதாயும் கூறினார்.

அந்த இருமாபெரும் புத்த சிலைகள் மூன்றாவது நூற்றாண்டிலும், ஐந்தாவது நூற்றாண்டுகளிலும் பாறைகளில் குடைந்து உருவாக்கப் பட்டவை. அவை சரிந்து விடவே, 1960 ல் அவற்றை அயல்நாட்டினர்கள் நேராக நிலைநிறுத்தினார்கள்.

வேதாளம்
சொல்லும்
கதை

# சரியான முடிவு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி, அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்பு அவன் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! அரச குடும்பத்தில் பிறந்த நீ இந்த நள்ளிரவில் பயங்கர சூழ்நிலையையும் பொருட்படுத்தாமல் விடா முயற்சி செய்வது கண்டு உன்னைப் பாராட்டுகிறேன். ஆனால், உன் முயற்சியும் கடைசியில் பலவர்மன் என்ற அரச குமாரனின் முயற்சி



போலப் பயனற்றுப் போய்விடுமோ என அஞ்சுகிறேன். அவனைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்.'', என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

வஜ்ஜிரபுரத்தின் மன்னன் வைபவ வர்மன். அவனது ஒரே மகள் வத்சலா. அவனுக்கு ஆண் சந்ததியே பிறக்க வில்லை. அவன் தன் மகளை மகன் போலக் கருதி, ஓர் இளவரசன் கற்க வேண்டியதை எல்லாம் கற்பிக்க ஏற்பாடு செய்தான். மேலும், தன் நாட்டை ஆளப் போகிறவன் தன் வம்சத்தவனாக இருக்க வேண்டும் என்று எண்ணித் தன் தங்கையின் மகனான பலவர்மன் தான் வத்சலா வின் கணவன் என அவர்களது இளம் பிராயத்திலேயே அவன் தீர்மானித்து விட்டான்.

எனவே, அவன் தன் அண்டை நாட்டு மன்னனின் மகனும், தன் தங்கையின் மகனுமான பலவர் மனைத் தன் நாட்டுக்கு வரவழைத் தான். அவன் தன் மகளுக்கும், பல வர்மனுக்கும் எல்லாக் கலைகளை யும் கற்றுக் கொடுக்கும்படி, அனந் தாச்சாரியார் நடத்தி வரும் குரு குலத்திற்கு அனுப்பினான். அதே குரு குலத்தில் வஜ்ஜிரபுர முதலமைச்ச ரின் மகன் மணிவர்மனும் கல்வி பயின்று வந்தான். தம் மூன்று மாண வர்களும் நன்கு கல்வி கற்று வருவது கண்டு அனந்தாச்சாரியார் மகிழ்ந்து போனார். குறிப்பாக வத்சலாவும், மணிவர்மனும் பல விஷயங்களைக் காழ்ப்பு உணர்ச்சியின்றி வாதப் பிரதி வாதங்கள் செய்து தீர்மானிப்பது கண்டு அவர் மகிழ்ந்து போனார். இந்த வாக்குவாதங்களில் பலவர்மன் இடையிடையே குறுக்கிட்டுத் தன் கருத்தைக் கூறினாலும், குரு அவன் கூறுவது சரியல்ல என விளக்கிக் கூறி வந்தார்.

குருகுலத்தில் வத்சலாவும், பல வர்மனும், மணிவர்மனும் ஒன்றாகப் படித்த போதிலும், எல்லா விஷயங் களிலும் மணிவர்மன் பலவர்மனை விட ஒரு படி மேலாகவே விளங்கி வந்தான். அது மட்டுமல்ல, வத்சலா மணிவர்மனுடன் நெருங்கிப் பழகி எல்லா விஷயங்களிலும் அவனி டமே தன் சந்தேகங்களைக் கேட்டு விளக்கம் பெற்று வந்தாள். இதனால் அவர்களிருவரும் மிகவும் நெருங் கிப் பழகலானார்கள். பலவர்மன் வத்சலாவிடமிருந்து விலகி இருப்

பது போலவே தெரிந்தது.

குருகுலத்தில் வத்சலாவின் படிப்பின் முன்னேற்றத்தையும், பலவர்மனின் நிலையையும் பற்றி வைபவ வர்மன் விசாரிக்கையில் மணிவர்மன் யாவரிலும் முன் நிற்பதையும், அவனும், வத்சலாவும் நெருங்கிப் பழகுவதையும் அறிந்து கொண்டான். இதனால் அவன் மனம் சற்றுக் கவலைப்படலாயிற்று. அவன் பலவர்மனையும், மணிவர்மனையும் ஒப்பிட்டுப் பார்க்கலானான்.

மணிவர்மனும், பலவர்மனைப் போல நல்ல அழகனே. போர்க் கலைகளிலும், படிப்பிலும் அவன் பலவர்மனைவிடச் சற்று மேலானவன். அரச குடும்பத்தில் பிறக்காவிட்டாலும், அவன் நல்ல க்ஷத்திரியனே. வத்சலா மணிவர்மனை மணக்கத் தீர்மானித்தால் பலவர்மனின் தாய், தந்தையரிடம் வத்சலாவை பலவர்மனுக்கு மணம் செய்து வைப்பதாகக் கூறி இதுநாள் வரை அவர்களை நம்ப வைத்தது ஏமாற்று வேலை என்று தானே அவர்கள் நினைப்பார்கள். எனவே பலவர்மன் மணிவர்மனை விட சிறந்தவன் என யாவருக்கும் நிரூபித்து அவனுக்கும், வத்சலாவுக்கும் திருமணத்தை நடத்திவிடுவது என்று வைபவவர்மன் தீர்மானித்துக் கொண்டான்.

தன் மகள் மணிவர்மனை விரும்புகிறாளா என்று அறிந்து கொள்ள அவன் விரும்பினான். அதனால் அவன் வத்சலாவின் ஆருயிர்த் தோழியான மைதிலியை அழைத்து, ''நீ



தான் என் மகளின் மனதில் தன் திருமணம் பற்றி என்ன நினைக்கிறாள் என்பதைக் கண்டறிந்து சொல்லக் கூடியவள். எனவே, அவள் பலவர்மனை மணக்க விரும்புகிறாளா அல்லது மணிவர்மனை மணக்க விரும்புகிறாளா என்பதைத் தெரிந்து கொண்டு வந்து என்னிடம் சொல்'' என்றான். மைதிலியும் ஒரு மாத காலம் கவனித்துவிட்டு மன்னனிடம், ''வத்சலா மணிவர்மனையே விரும்புகிறாள். எல்லா விதத்திலும் அவன் தனக்கு ஏற்றவன் என்றே நினைக்கிறாள். மேலும் மணிவர்மனை மணந்து கொண்டால் தன் பிறந்த நாட்டிலேயே இருந்து மக்களுக்கு நல்லாட்சியைக் கொடுக்க முடியும் என்றும் எண்ணுகிறாள்'', என்று கூறினாள்.



அதைக் கேட்ட வைபவவர்மன், 'சரி, இனி பலவர்மன் மணிவர்மனை விட எல்லா விதத்திலும் உயர்ந்தவன் என வத்வலாவுக்குக் காட்டி, அவள் மனதை பலவர்மன் பக்கம் திருப்ப வேண்டும்' எனத் தீர்மானித்தான். ஆனால் அப்போது பலவர்மன் தன் மாமாவைக் கண்டு, ''வத்சலா மணி வர்மனையே மணக்க விரும்புவது தெரிகிறது. இந்நிலையில் நான் என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை'' என்றான்.

வைபவவர்மனும், ''சிறு வயதாக நீ இருக்கும்போதே வத்சலா தான் உன் மனைவி என்று நான் தீர்மானித் தேன். அதுதான் நடக்க வேண்டும். உன்னைவிட அந்த மணிவர்மன் சற்று உயர்ந்தவனாக வத்சலாவுக்கு இப் போது தென்படுகிறான். நீ அவனை விட எல்லா விதத்திலும் சிறந்தவன் என வத்சலா நினைக்கும்படிச் செய்ய வேண்டும். இதற்காக உன்னை நான் மிகச் சிறந்த குருவான ஹேமசந்திர ரிடம் அனுப்புகிறேன். நீ அவரது குரு குலத்தில் ஆறுமாத காலம் பயிற்சி பெற்றால் மணிவர்மனை மிஞ்சி விடுவாய். அப்போது, நீ அவனுடன் போட்டி போட்டு அவனை வென்று காட்டினால், வத்சலா மனம் மாறி உன்னை மணக்கச் சம்மதிப்பாள்'' என்றான்.

பலவர்மனும், ''மாமா! எனக் கென்னவோ வத்சலாவின் மனம் இவ்வாறு நான் போட்டி போடுவ தால் மாறிவிடும் என்று தோன்ற வில்லை. ஆயினும், நீங்கள் கூறிய படியே ஹேமசந்திரரின் குருகுலத் தில் இருந்துவிட்டு வருகிறேன்'', என்று கூறிவிட்டுச் சென்றான். அவன் ஹேமசந்திரரின் குருகுலத்தை அடைந்து அவரிடம் ஆறு மாதம் பயிற்சி பெற்றான்.

பயிற்சி முடிந்ததும், பலவர்மன் ஹேமசந்திரரிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பவே, அவரும் சில அறிவுரைகள் கூறிவிட்டு, ''ஆமாம். வஜ்ஜிரபுர மன்னன் உன் தாய்மாமன் என்றுதானே கூறினாய்? அந்நாட் டின் முதலமைச்சரின் மகன் மணிவர் மனை நீ அறிவாயா?'' என்று கேட் டார். அதைக் கேட்ட பலவர்மன் ஆச் சரியப்பட்டவாறே, ''அவனை நன்கு அறிவேன். ஏன் அவனைப் பற்றிக் கேட்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

ஹேமசந்திரர் புன்னகை புரிந்த



வாறே, ''நான் சில சமயங்களில் யாருக்கும் தெரியாமல் மாறுவேடத் தில் பல இடங்களுக்குப் போய் வரு வதுண்டு. நீ இங்கு என் சீடனாக வரு வதற்கு முன் வஜ்ஜிரபுரியில் வசந் தோற்சவம் நடந்தது. அது சமயம் பலர் தாம் கற்ற போர்க் கலைகளில் தம் திறமையைக் காட்டினார்கள். அதை நான் பார்த்தேன். அவர்களில் மணிவர்மன் செய்து காட்டியவற்றை என்னால் மறக்க முடியவில்லை. என்ன வேகம்! என்ன அற்புதம்!! எப்படியெல்லாம் அவன் கைகளில் ஆயுதங்கள் சுழன்றன!!! அவனது ஒவ்வொரு அசைவும் என் கண் முன்னால் இன்னமும் நிற்கிறது. என் னால் மறக்கவே முடியவில்லை'' என்றார். அதைக் கேட்ட பலவர்மன் திகைத்து நின்றான். பிறகு அவன், ''குருவே! அன்று நான் கூட என் திறனை யாவர் முன்னும் காட்டி னேனே'', என்று தாழ்ந்த குரலில் பணிவுடன் கூறினான். ஹேமசந்திர ரும் அவனை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ''இருந்தா லும் இருக்கலாம். சரியாக நினை வில்லை'' என்றார்.

ஹேமசந்திரரின் குருகுலத்தில் இருந்து திரும்பி வந்த பலவர்மன் தன் மாமா வைபவவர்மனைக் கண்டு, ''மாமா! ஹேமசந்திரர் அளித்த பயிற் சியில் நான் சற்றுத் தேர்ச்சி பெற்று முன்னேறியுள்ளேன். ஆனால் வத்ச லாவிற்கு முறை மாப்பிள்ளை என்ற உரிமை கொண்டாடி அவளை மணக்க விரும்பவில்லை. அவள் மணிவர்

மனை மணப்பதே சரி. அவர்களது திருமணத்தை நடத்திவிடுங்கள்'' என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''பலவர்மன் ஹேமசந்திரரிடம் ஆறு மாதத்திற்குச் சிறப்புப் பயிற்சி பெற்று வந்து மணிவர்மனைத் தோற் கடிப்பது என்று தானே எண்ணினான். ஆனால் பயிற்சி பெற்று மணிவர் மனுடன் போட்டி போட வேண்டிய நிலையில் அவ்வாறு போட்டியிடா மல் ஏன் வத்சலாவை மணிவர்ம னுக்கே மணம் செய்து வைக்கும்படி வைப்வவர்மனிடம் கூறினான்? முழு முயற்சி செய்து முடிவில் பலன் கிடைக்கும் போது அதை பலவர்மன் கைநழுவவிட்டது, அவனது அறியா மையைக் காட்டவில்லையா? இக் கேள்விகளுக்கு சரியான பதில்கள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும், ''பலவர்மன்தானா கவே குருகுலம் சென்று ஹேம சந்திரரின் சீடனானான். ஆனால் ஹேமசந்திரரின் கவனமோ, அவரது சீடனாகக் கூட இல்லாத மணிவர் மனிடம் சென்றது, அவர் அவனை மிகவும் பாராட்டினார். அப்போட்டி யில் தானும் கலந்து கொண்டு தன் திறமையைக் காட்டியதாகப் பலவர் மன் அவரிடம் கூறியபோது கூட அவர் அவனைக் கவனிக்கவில்லை என்றதும் அவன் தனக்கும், மணி வர்மனுக்கும் பல வித்தியாசங்கள் உள்ளதையும், மணிவர்மன் தன்னை விடச் சிறந்தவன் என்பதையும் உணர்ந்தான். அதனால் வத்சலாவை மணக்கத் தகுந்தவன் மணிவர்மனே என்றும், தான் அல்ல என்றும் அவன் முடிவுக்கு வந்தான். அது அவனது அறியாமை அல்ல. உயரிய மனிதன் செய்ய வேண்டிய கடமை. அதைத் தான் பலவர்மன் செய்தான். அப்படி அவன் செய்தது மிகவும் சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.





# மாயாஜால மலை

## 4

(மந்திரவாதியையும், ஜடாமுனியையும் பின்தொடர்ந்து சென்ற ஜீவதத்தனும், கஜவர்மனும் குகைக்குள் அவர்களைக் காணாமல் ஒரு சுரங்க வழியே சென்று, இடிந்து கிடந்த, பல மாளிகைகள் இருந்த இடத்தை அடைந்தார்கள். அந்த மாளிகைகளில் ஒன்றிலிருந்த ஒரு பெண் பூசாரி அவ்விருவரையும் பிடித்துக் கொண்டு வரும்படி மந்திரவாதிக்குக் கட்டளை இட்டாள். அவனும் ஜடாமுனியுடன் சென்றான். அப்போது–)

இடிந்து கிடக்கும் மாளிகைகளைக் கண்ட ஜீவதத்தன் அவற்றை யார், எந்தக் காலத்தில் கட்டினார்கள் என்றும், அவை ஏன் இடிந்து பாழாகின என்றும் யோசிக்கலானான். கஜவர்மனோ மந்திரவாதியையும், ஜடாமுனியையும் பிடித்துக் கொன்றுவிட்டு அங்கிருந்து எப்படி வெளியே போவது என்று எண்ணலானான்.

அச்சமயம் அவர்கள் நின்ற இடத்திலிருந்த சுவர் மீது ஏதோ ஒரு பொருள் 'பட்'டென்ற சத்தத்தோடு விழுந்தது. கஜவர்மன் திடுக்கிட்டு, ''ஜீவா! நம்மை யாரோ தாக்க முயல்கிறார்கள் போலிருக்கிறதே!'' என்றான். ஜீவதத்தனும், ''ஆம். வேறு யார்? மந்திரவாதியும், ஜடாமுனியுமாகத்தான் இருக்கும்'' என்றான். அதே சமயம் மந்திரவாதியும் ஒரு சுவர் மீது ஏறி நின்று, ''அடே, சுண்டைக்காய்ப் பயல்களே! உங்கள் இருவரையும் எமலோகத்திற்கு அனுப்புகிறேன், பார்'', என்று கூறித் தன் வாளை ஜீவதத்தனுக்குக் குறி வைத்து வீசினான்.

ஜீவதத்தன் சட்டென விலகிவிட, அந்த வாள் எங்கோ போய் விழுந்தது. இதற்குள் கஜவர்மன் பாய்ந்து,



மந்திரவாதியின் கையைப் பிடித்துக் திருகி, ''அடே, தொடைநடுங்கியே! எங்களைப் பார்த்து பயந்து இங்கு ஓடி வந்த நீயா எங்களை எமலோகத் திற்கு அனுப்பப் போகிறாய்?'' என்று பற்களை 'நற நற'வென்று கடித்த வாறே கேட்டான். இதே சமயம் ஜடாமுனியும் பேயாட்டம் ஆடிய வாறே கத்திக் கொண்டு வந்தது. ஜீவதத்தன் அதன் காலைப் பிடித்து இழுக்கவே, அது கீழே விழுந்து 'ஓ'வென அலறி யது.

அப்போது ஜீவதத்தன், ''கஜா! அவனைக் கீழே தள்ளு. இனி நாம் இங்கே இருக்க வேண்டாம். அதோ தென்படும் மாளிகைக்குள் போய் விடலாம்'' எனவே, கஜவர்மனும் மந்திரவாதியைக் கீழே தள்ளி ஓர் உதை கொடுத்துவிட்டு ஜீவதத்தனு டன் சென்றான். இருவரும் ஒரு மாளி கையை அடைந்தார்கள். அங்கு யாரும் இல்லாதது கண்டு ஜீவதத்தன், ''பேஷ்! இப்பகுதியில் வேறு யாரும் இல்லை. அந்த மந்திரவாதியும், ஜடாமுனியும் அங்கே விழுந்து, எழ முடியாமல் முனகிக் கொண்டிருக்கி றார்கள். அவர்களால் நமக்கு எந்த ஆபத்தும் வராது'' என்றான்.

இருவரும் அங்கு தென்பட்ட ஓர் அறைக்குள் சென்றனர். அங்கு நான் கைந்து பெருச்சாளிகள் தான் ஓடிக் கொண்டிருந்தன. ஒரு பருத்த ஆந்தை அவற்றில் ஒன்றைப் பற்றி இழுத்துக் கொண்டு போயிற்று. அங்கு வேறு யாரும் இல்லை எனப் பார்த்துக் கொண்டிருக்கையில் அவர்களது தலைகளின் மீது பலத்த அடிகள் விழுந்தன. அதனால் அவர்கள் இரு

வரும் நினைவிழந்து விழுந்து விட்டார்கள். உடனே பெண் பூசாரியின் நான்கு ஆட்கள் வந்து அடிபட்ட அவர்களது தலைகளைக் கவனமாகப் பார்த்தார்கள். அவர்களது தலைகளில் காயம் ஏற்படாததையும், ஒரு சொட்டு ரத்தம் கூட வெளிப்படாததையும் கண்டு, அந்த நால்வரும் திருப்தி அடைந்தார்கள்.

அவர்களில் ஒருவன், ''நல்ல வேளை, நாம் தப்பினோம். இவர்களுடைய மண்டைகள் மட்டும் உடைந்து ரத்தம் சிந்தி இருந்தால் அந்தப் பெண் பூசாரி நம்மை சித்திர வதை அல்லவா செய்து விடுவாள்'' என்றான். இன்னொருவன், ''அதற்காகத் தானே நம் குண்டாந்தடிகளில் கம்பளியைச் சுற்றி எடுத்து வந்தோம். அடியும் பலமாக விழ வேண்டும். ஆனால் காயம் ஏற்படக் கூடாது என்பதற்காகத் தானே அப்படிச் செய்தோம்'', என்றான். அப்போது முதலாமவன், ''சரி, இவர்களது கை கால்களைக் கட்டித் தூக்கிக் கொண்டு போய் அந்தப் பூசாரியம்மா முன் போடலாம்'', எனவே அவர்கள் அந்த இருவரின் கை கால்களைக் கட்டி தூக்கிக் கொண்டு போய் பூசாரியம்மாவின் முன் போட்டார்கள்.

பூசாரியம்மாவும் ஜீவதத்தனையும், கஜவர்மனையும் நன்கு பார்த்து விட்டு, ''இவர்களில் ஒருவன் மந்திர வாதி போல் தெரிகிறதே!'', என்று ஆச்சரியப்பட்டவாறே கூறினாள். அதற்கு அவர்களைச் சுமந்து வந்தவர்களின் தலைவன், ''இருக்கலாம்,



பூசாரியம்மா! இவன் கையில் மந்திரத் தடி இருந்தது. மற்றவனிடம் நீண்ட வாள் இருந்தது. அவற்றை இவர்களைப் பிடித்த இடத்திலேயே விட்டு விட்டு வந்தோம்'' என்றான்.

பூசாரியம்மாவும், ''ஓடிப் போய் அந்த இரண்டையும் எடுத்துக் கொண்டு வா!'' எனக் கட்டளை இடவே, அத்தலைவனும் ஓடிப் போய் அவற்றை எடுத்து வந்து அவள் முன் வைத்தான்.

பூசாரியம்மாவும் அவற்றை எடுத்துப் பார்த்து விட்டு, ''இதில் விசேஷ சக்தி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. இவர்கள் இருவரையும் ஓர் இருட்டு அறைக்குள் கொண்டு போய் படுக்க வைத்து இவர்களின் பக்கத்திலேயே இந்த இரு பொருள்களை



யும் வைத்து விடு. அதன் பிறகு என்ன நடக்கிறது என்று பார்ப்போம்'' என் றாள். அந்த ஆட்களும் அவள் கூறிய படியே செய்தார்கள்.

சற்று நேரத்திற்குப் பின் ஜீவதத் தன் மயக்கம் தெளிந்து எழுந்தான். அவன் கஜவர்மனை உலுக்கி எழுப்பி ''இந்தப் பூசாரியம்மா நம்மை ஒன் றும் செய்யாமல் ஏன் விட்டு வைத் திருக்கிறாள்?'' என்று கேட்டான். கஜவர்மன் பதில் கூறுவதற்குள் ஒரு சிங்கத்தின் கர்ஜனை கேட்டது. அது கேட்டு கஜவர்மன், ''அந்த சிங்கத் திற்கு நம்மை இரையாக்கும் எண் ணம் அவளுக்கு இருக்கலாம்'' என் றான். ஜீவதத்தனும், ''அப்படியா னால் அந்த சிங்கத்தை அவர்கள் மீதே திருப்பி விடலாம்'' என்றான். அவன் தன் மந்திரத் தடியைக் கையில் எடுத்துக் கொண்டு சுவரில் பலமாகத் தட்டினான். அங்கிருந்த சிங்கம் ஓர் ஓரமாய்ப் போய் நின்று உறுமியது.

அவர்கள் தம்மை நோக்கிப் பூசாரி யம்மாவின் பனிரெண்டு ஆட்கள் வருவதைக் கண்டனர். ஜீவதத்தன் சிங்கத்தைத் தன் மந்திரத் தடியால் தட்டி அதனை அந்த ஆட்களின் மீது பாய ஏவினான். அது நால்வர் மீது பாய்ந்து அவர்களைக் காயப்படுத்திக் கீழே தள்ளியது. அதைக் கண்டு மற்றவர்கள் சுவரைத் தாண்டிக் குதித்து ஓடிவிட்டனர்.

அதன் பின் ஜீவதத்தன், ''சிங்கமே! நீ சுரங்கப் பாதை வழியே ஓடிவிடு'' என்று கூறித் தன் மந்திரத் தடியால் அதன் முதுகில் தடவினான். சிங்கம் சற்று முரண்டு பிடிக்கவே, ஜீவதத்தன் அதனைத் தன் மந்திரத் தடியால் தள்ளினான். சிங்கம் உருண்டு சுரங் கப் பாதைக்குப் போய் அதன் வழியே வெளியே ஓடியது.

இடிந்த சுவர் மீது உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்த பூசாரியம்மா வின் ஆட்கள் ஜீவதத்தனும், கஜ வர்மனும் சிங்கத்தைக் கண்டு பயப் படாமல் அதை விரட்டியது கண்டு ஆச்சரியப்பட்டனர். அவர்கள் ஜீவதத் தனை வணங்கி, ''ஐயா! உங்கள் மந்திர சக்தி அபாரமானது. அதனால் பூசாரியம்மாவை ஒழித்துவிட்டு நீங்களே இப்பகுதியின் மன்னராக ஏன் ஆகக் கூடாது? அப்போது நாங் கள் உங்கள் பணியாட்களாகி விடு வோம்'' என்றார்கள். ஓரிருவர் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்து, மற்றவர்களை

அடிக்கத் தொடங்கினார்கள். இதனால் அங்கு கைகலப்பு பலத்தது. சிலர் அலறியவாறே கீழே விழுந்தார்கள்.

அந்த சத்தத்தைக் கேட்டு சுரங்க வழியில் நின்று கொண்டிருந்த சிங்கம் பயங்கரமாகக் கர்ஜித்தவாறே திரும்பியது. அப்போது ஜீவதத்தன் சிங்கத்தை நோக்கித் தன் மந்திரத் தடியை ஆட்டியவாறே, ''உம். அந்த வழியில் போய்விடு. இவர்கள் விஷயத்தில் நீ தலையிடாதே!'', எனக் கூறவே, சிங்கம் சுரங்கப்பாதை வழியே சென்று விட்டது.

அப்போது கஜவர்மன், ''ஜீவா! நாம் மட்டும் ஏன் இங்கே இருக்க வேண்டும்? பூசாரியம்மாவின் ஆட்கள் தமக்குள் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நம்மை வழியில் யாரும் தடுத்து நிறுத்துவோரும் இல்லை. பேசாமல் நம் காட்டிற்கே போய் விடலாம்'' என்றான். ஜீவதத்தனும், ''நாமும் சிங்கம் போன சுரங்கப் பாதை வழியே போய் நம் காட்டை அடையலாம்'' என்று கூறினான்.

இதற்குள் பூசாரியம்மாவிற்கு சிங்கம் அவளது ஆட்களைத் தாக்கி வீழ்த்தியதை அவளது அடிபட்ட பணியாள் ஒருவன் தெரிவித்தான். அதைக் கேட்ட பூசாரியம்மா ''இது என்ன என் சக்திக்கு வந்த பெரும் சோதனை? மிகவும் மந்திர சக்தி வாய்ந்தவன் என்று கருதப்பட்ட மந்திரவாதியையே நான் அடக்கிச் சிறைக்குள் பூட்டி வைத்திருக்கிறேனே. என்னைத் தாக்க இரு அற்ப மானிடர்கள் வருவதா? என் இருப்பிடத்தில் புகுந்து என் ஆட்களை அவர்கள் அடித்து வீழ்த்தியது எனக்கு எவ்வளவு அவமானம்? அடே தடியர்களே! இப்போதே போய் அந்த இரு மானிடப் புழுக்களைப் பிடித்து வாருங்கள்'' என்று அங்கே இருந்த சில ஆட்களுக்குக் கட்டளை இட்டாள்.



அப்போது ஒருவன், ''அவர்களில் ஒருவன் சக்தி வாய்ந்த மந்திரவாதி போல் தோன்றுகிறானே! அவர்கள் நம் ஆஸ்தான மந்திரவாதியையும், ஜடாமுனியையும் அடித்து வீழ்த்தியவர்களாயிற்றே'', எனப் பயந்தவாறே கூறினான். அதைக் கேட்ட பூசாரியம்மா தன் ஈட்டியை எடுத்து அவன் கழுத்தின் மீது



வைத்து ''பேசாமல் என்னோடு வா. அந்த இரு பயல்களையும் பிடித்து காளிக்குப் பலியிட வேண்டும்.'', என்றாள். பூசாரியம்மா தன் ஆட்களையும், மந்திரவாதியையும், ஜடா முனியையும் அழைத்துக் கொண்டு ஜீவதத்தனையும், கஜவர்மனையும் பிடிக்கச் சென்றாள்.

ஜீவதத்தனும், கஜவர்மனும் சுரங்கப்பாதை என்று எண்ணிச் சென்ற வழி அவர்களை வெளியே கொண்டு போய்விடவில்லை. பாதியிலேயே அடைபட்டு விட்டதால் வேறு ஏதாவது வழி இருக்கிறதா என்று அவர்கள் தேடலானார்கள்.

அப்போது ஜீவதத்தன், ''கஜா! நாம் எங்கோ வந்து விட்டோம். நாம் வெளியேற்றிய சிங்கம் எங்கே போயிற்று? அதுவும் நம்மைப் போல வழி தெரியாமல் எங்காவது நிற்கிறதா?'' என்று கேட்டான்.

கஜவர்மனும், ''இருக்கலாம். நடு நடுவே அது கர்ஜிப்பது காதில் விழுந்து கொண்டிருக்கிறதே'' என்றான். இருவரும் அங்கிருந்து ஒரு கட்டடத்தின் அறைக்குள் சென்றார்கள். ஜீவதத்தன் நின்று, ''அடேயப்பா! அதோ பார். மலை போல தானிய மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றனவே! இவை எல்லாம் திருடியோ அல்லது கொள்ளை அடித்தோ சேர்க்கப்பட்டவை என்று தெரிகிறது'' என்றான்.

அவற்றை அவர்கள் பார்த்த போது கீழே கோதுமையும், நெல்லும், சோளமும் சிதறிக் கிடைப்பதைக் கண்டனர். அவை யாவும் பூசாரியம்மாவின் ஆட்களும், மந்திரவாதியும், ஜடாமுனியும் மக்களைப் பயமுறுத்திப் பறித்து வந்து அங்கே வைக்கப்பட்டவை எனத் தெரிந்து கொண்டார்கள்.

அப்போது ஜீவதத்தன், ''என்ன அநியாயம்! எவ்வளவு பேர்கள் வயிற்றில் அடித்து இவற்றை இவர்கள் இங்கு ஒளித்து வைத்திருக்கிறார்கள்! இதிலிருந்து ஒரு மணி தானியம் கூட இந்தப் பயல்களுக்குக் கிடைக்காதபடி செய்துவிட வேண்டும். அப்போது தான் இவர்களுக்குப் புத்தி வரும். அதற்கு என்ன செய்யலாம்?'' என்று கூறியபடி யோசிக்கலானான். கஜவர்மனும், ''அதற்கு வழி இதுதான். என்னிடம் சிக்கிமுக்கிக் கல்லும், பஞ்சும் உள்ளன.

நெருப்பை உண்டாக்கிப் பஞ்சில் பற்ற வைத்து எரியும் பஞ்சை மூட்டைகளுக்கிடையே தூக்கி எரிவோம். இவை யாவும் நெருப்புப் பற்றி எரிந்து சாம்பலாகிவிடும்'', என்றான்.

ஜீவதத்தனும், ''அப்படியே செய்வோம்'' எனக் கூறி நெருப்பை மூட்டி தானிய மூட்டைகளின் மீது விட்டெறிந்தான்.

நெருப்பு மூட்டைகளில் பற்றிப் பரவலாயிற்று. அது கொழுந்து விட்டு எரிவதை இருவரும் பார்த்தவாறே நின்றார்கள். நெருப்பின் புகை எங்கும் பரவவே ஓர் அறையில் யாரோ ஒரு மனிதன் உரக்கக் கூவி தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டுவது அவர்களது காதில் விழுந்தது.

அப்போது ஜீவதத்தன், ''கஜா! யாரோ ஒருவன் அந்த அறையில் அடைபட்டுக் கிடக்கிறானெனத் தெரிகிறது. கதவை உடைத்துக் கொண்டு உள்ளே போய் நாம் பார்ப்போம்'' என்றான். இருவரும் அந்த அறையின் கதவின் முன் நின்றார்கள். கதவு மூடி பூட்டப்பட்டிருப்பது கண்டு கஜவர்மன் ''கதவு மூடி பூட்டப்பட்டிருக்கிறதே. நாம் எப்படி உள்ளேபோவது? பூட்டை உடைத்துக் கதவைத்திறந்து கொண்டு உள்ளே போகலாமா?'' என்று கேட்டான். ஜீவதத்தன் தன் மந்திரத்தடியால் பூட்டைத் தட்டினான். பூட்டு தெறித்துக் கீழே விழுந்தது. கஜவர்மன் கதவை பலமாகத் தள்ளவே அது திறந்து கொண்டது.

அறையில் லேசாக வெளிச்சம் இருந்தது. அவர்கள் உள்ளே போய் பார்த்தார்கள். சுவரில் பதிக்கப்பட்ட ஓர் இரும்பு வளையத்தில் சங்கிலியால் கட்டப்பட்டு அதில் பிணைக்கப்பட்ட ஒரு கிழவனை அவர்கள் பார்த்தார்கள். அவன் மிகவும் மெலிந்திருந்தான். ஒரு காலத்தில் அவனது உடல் கட்டுமஸ்தானதாக இருந்திருக்க வேண்டும். அவனது நீண்ட வெள்ளைநிறத் தாடி காற்றில் ஆடி அசைந்து கொண்டிருந்தது.

(தொடரும்)



ஒரு நாகரீகத்தின் உயரிய கட்டங்கள், பரம்பரை பரம்பரையாக, உண்மையைக் காண ஆய்வு

# 15. உண்மையையே உரைத்த உத்தமர்



வழக்கம் போல சோமநாதர் ஆல மரத்தடியே உட்கார்ந்து குழந்தைகளுக்குக் கதை சொல்ல ஆரம்பித்தார். அவர், ''குழந்தைகளே! நான் சொல்வது பழங்காலக் கதைகளாயினும், அவை உண்மையின் மேன்மையை எடுத்துக் கூறுவன. உங்களுக்கு முன்பு ஒரு தடவை திரிசங்கு மன்னனைப் பற்றிக் கூறினேனல்லவா? இன்று அவனது மகன் ஹரிச்சந்திரனைப் பற்றிக் கூறுகிறேன். உண்மையைக் கைவிடாத அந்த உத்தமனின் வாழ்க்கை ஒவ்வொரு அடியிலும் பரீட்சைக்குள்ளாகியது. ஒவ்வொரு பரீட்சையிலும் அவன் வெற்றி பெற்று, புடம் போட்ட தங்கம் போல விளங்கினான். இன்று அவன் கதையைக் கூறுகிறேன்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தார்.

ஒரு முறை தேவலோகத்தில் இந்திர சபையில் வசிஷ்ட முனிவர், ''என் சீடன் மன்னன் ஹரிச்சந்திரன் சத்தியசந்தன். உண்மையே பேசுபவன். ஒரு பொய் கூடக் கூறாதவன்'' என்று கூறினார். எப்போதுமே வசிஷ்டரிடம் பகைமை பாராட்டி வந்த விசுவாமித்திர முனிவர் ''நான் அவனைப் பொய் பேச வைக்கிறேன். அவ்வாறு செய்ய முடியாவிட்டால் என் தவ சக்தி முழுவதையும் இழக்கத் தயார்'' என்று சவால் விட்டுவிட்டுச் சென்றார்.

பூவுலகிற்கு வந்த விசுவாமித்திரர் ஒரு ராட்சஸனைத் தன் சக்தியால் ஒரு காட்டுப் பன்றியாக மாற்றினார். அதனை அவர் ஹரிச்சந்திரனின் அழகிய பூந்தோட்டத்தை அழித்துவிட்டு வரும்படி ஏவினார். அதுவும் அப் பூந்தோட்டத்தில் புகுந்து செடிகளைப் பெயர்த்து, எறிந்து பாத்தி

'பாரதீயன்'



களைக் குடைந்து பாழாக்கியது. தோட்டக்காவல்காரர்களாலும், படை வீரர்களாலும் அதை அடக்க முடிய வில்லை. அவர்கள் மன்னனிடம் போய் அதைக் கூறவே, மன்னனும் வில்லையும், அம்புகளையும் எடுத்துக் கொண்டு, குதிரை மீது அமர்ந்து, அந்தப் பன்றியைத் துரத்திக் கொண்டு சென்றான். பன்றியோ, அவனுக்கு அகப்படுவது போல இருந்து திடீரென மறைந்து போவதும், பிறகு சற்று தூரத்தில் தென்பட்டு மன்னனைத் துரத்தும்படி வைப்பதுமாகப் பல முறைகள் நடந்தன.

முடிவில் மன்னன் களைத்துப் போய் அங்கு கண்ட ஓர் ஆற்றின் நீரை அள்ளிப் பருகிவிட்டு, ஒரு பாறை மீது அமர்ந்து இளைப்பாறினான். அப்போது ஒரு கிழப்பிராம்மணன் அங்கு வந்து அவனிடம் தர்ம சாஸ்திரங்கள் பற்றிப் பேசலானான். ஜன நடமாட்டமே இல்லாத இடத்தில் இப்படி ஒரு மகாஞானியா என்று எண்ணி, மன்னன் அந்தப் பிராம்மணனிடமே அவனைப் பற்றி விசாரிக்கவே அவனும், ''எனக்கு இருப்பவன் ஒரு மகன். அவனுக்குத் திருமணம் செய்து வைக்க நினைக்கிறேன். ஆனால் என்னிடம் பணம் தான் இல்லை'' என்று புலம்பினான்.

மன்னனும், ''கவலைப்படாதீர்கள். தலைநகருக்கு வந்து தர்பாரில்



என்னைப் பாருங்கள். நீங்கள் கேட்பதை நான் கொடுக்கிறேன்'' என்று கூறிவிட்டுத் தலைநகருக்குச் சென்றான். மறுநாளே அந்த பிராம்மணன் ஹரிச்சந்திர மன்னனின் தர்பாருக்குப் போய், ''மன்னா! நான் கேட்பதை நீ கொடுப்பதாகக் கூறினாய். எனக்கு இந்த நாடு, உன் அரண்மனை எல்லாம் வேண்டும்'' என்றான். ஹரிச்சந்திரனும் சற்றும் தயங்காமல் பிராம்மணன் கேட்டதை எல்லாம் தானமாகக் கொடுத்துவிட்டான். அந்த பிராம்மணனாக வந்தவர் விசுவாமித்திரரே.

அவரும், ''ஹரிச்சந்திரா! நீ சொன்ன சொல் தவறாமல் நடந்துவிட்டாய். தானம் கொடுத்தபின் தட்சிணை கொடுக்க வேண்டுமே.



அதைக் கொடு'' என்றார். அவருக்கு எல்லாவற்றையும் கொடுத்துவிட்ட தால் ஹரிச்சந்திரனிடம் கொடுப்ப தற்கு எதுவுமே இருக்கவில்லை. ஆயினும் அவன் ''நீங்கள் கேட்கும் தட்சிணையைக் கொடுக்கிறேன். கொஞ்சம் அவகாசம் கொடுங்கள்'' என்றான். அவன் தன் மனைவி யையும், மகனையும் அழைத்துக் கொண்டு காசி நகரத்திற்குச் சென் றான். பிராம்மணனும் இரண்டு நாட் களுக்குப் பின் காசி நகரை அடைந்து ஹரிச்சந்திரனைக் கண்டு, ''எங்கே என் தட்சிணை?'' என்று கேட்டான்.

ஹரிச்சந்திரனும், ''சற்றுப் பொறுங்கள். நான் என் மனைவி யையும், மகனையும், என்னையும் விற்று தட்சிணை கொடுக்கிறேன்'' எனவே, பிராம்மணனும், ''ஏன் இவ் வளவு கஷ்டம்? பேசாமல் தட்சிணை இல்லை என்று சொல்லிவிடு'' என்றான். ஹரிச்சந்திரனோ ''நான் சொன்ன சொல் தவற மாட்டேன். பொய் சொல்ல மாட்டேன்'' என்று கூறினான். அவன் தன் மனைவியை யும், மகனையும் ஒரு பிராம்மண னுக்கு விற்றும், தன்னை ஒரு மயா னத்தின் தலையாரிக்கு விற்றும், அந்தப் பணத்தை பிராம்மணனுக்கு தட்சிணையாகக் கொடுத்தான். ஹரிச் சந்திரனின் மனைவி சந்திரமதியும், மகன் லோகிதாசனும் பிராம்மண னின் வீட்டு வேலைகளை எல்லாம் மிகவும் கஷ்டப்பட்டு செய்தார்கள். ஹரிச்சந்திரன் மயானத் தலையாரி யின் அடியாளாக வேலை பார்த்து, மயானத்தைக் காவல் காத்து, அங்கு கொண்டு வரப்படும் பிணங்களை எரிக்கக் கட்டணம் வசூல் செய்யும் வேலையையும் செய்து வந்தான்.

ஒரு நாள் லோகிதாசன் பிராம் மணன் கட்டளைப்படி தர்ப்பைப் புல் அறுத்து வரச் சென்று, அங்கே பாம்பு தீண்டி இறந்துவிட்டான். இதைக் கேட்ட சந்திரமதி துடிதுடித்து தன் மகனை மயானத்திற்கு எடுத்துச் செல்ல பிராம்மணனிடம் அனுமதி கோரினாள். அவனோ, இரவில் லோகிதாசனின் உடலை மயானத் திற்கு எடுத்துப் போகும்படிக் கூறி னான். வேறுவழி இல்லாமல் சந் திரமதியும் அவ்வாறே செய்தாள்.

மயானத்தில் காவல் புரிந்து கொண்டிருந்த ஹரிச்சந்திரன், சந்திர மதியிடம் பிணத்தை எரிக்கக் கட்

டணம் கொடுக்க வேண்டுமெனக் கூறினான். சந்திரமதி தன்னிடம் ஒரு காசு கூட இல்லை என்று கூறினாள். சற்று நேரத்தில் அவர்கள் ஒருவரை மற்றவர் தெரிந்து கொண்டார்கள். தன் கணவன் மயானக் காவலாளி என்பதை அறிந்து சந்திரமதி மறுகணமே தன் நினைவை இழந்து விழுந்தாள்.

அவள் நினைவு பெற்றதும், இறந்து கிடப்பது நம் மகன் லோகிதாசனே எனத் தன் கணவன் ஹரிச்சந்திரனிடம் கூறினாள். அப்போது ஹரிச்சந்திரன், ''நீயும், நானும் லோகிதாசனை எரிக்கும் நெருப்பில் குதித்து, உயிரை விட்டுவிடுவோம்'' எனவே, சந்திரமதியும் அதற்குத் தயாரானாள்.

லோகிதாசன் உடலில் நெருப்பு மூட்டிவிட்டு, ஹரிச்சந்திரனும், சந்திரமதியும் அதில் குதிக்கும் போது இடி இடிப்பது போன்ற சத்தம் கேட்டது. மறு நிமிடமே லோகிதாசன் உயிர் பெற்று எழுந்து வந்தான். அப்போது விசுவாமித்திரர் இந்திரன் முதலான தேவர்களுடன் அங்கு வந்து, ''ஹரிச்சந்திரா! நீதான் உண்மையான சத்தியசந்தன். பொய்யே பேசாதவன். நீ உண்மையைக் கைவிடவில்லை. சொல்லாலும், செயலாலும், மனத்தாலும் நீ அதனை உறுதியுடன் பற்றி இருந்தாய். உன் புகழ், உலகில் ஓங்கி நிற்கும். உன் நாட்டை நீ திரும்பப் பெற்றுக் கொள்'', எனக் கூறி அவனையும், சந்திரமதியையும், லோகிதாசனையும் அயோத்திக்கு அழைத்துச் சென்றார். ஹரிச்சந்திரன் ஆட்சிப் பொறுப்பை ஏற்று மன்னனாகி நன்கு ஆண்டு வந்தான்.

சோமநாதர் இக்கதையைக் குழந்தைகளுக்குக் கூறி, ''உண்மையே உரைத்து, உயர்ந்து, உத்தமன் என்று பெயர் பெற்ற ஹரிச்சந்திரனை இன்றும், யாவரும் போற்றுகிறார்கள். அவனது கதையால் பல பெரியோர்கள் தம் வாழ்வில் புதிய திருப்பத்தை அடைந்தனர். அவர்களுள் மகாத்மா காந்திஜீயும் ஒருவர்'', எனக் கூறி முடித்தார்.



## அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

நாம் திரைப்படங்களைக் கண்டு களிக்கிறோம். நமக்கு உலகம் போற்றும் உயரிய திரைப்படங்களைத் தயாரித்து அளித்து, இந்தியாவின் பெருமையையும், உயர்வையும் நிலைநாட்டியவர் சத்தியஜித் ரே. இவர் திரைப்பட உலகில் ஆற்றிய பணிக்காகப் பல விருதுகளைப் பெற்றிருக்கிறார். அவற்றில் குறிப்பிடத்தக்கது 1992ல் இவர் அடைந்த ஆஸ்கார் விருது தான்.

கோல்கத்தாவில் 1921 மே 2ல் சத்தியஜித் ரே பிறந்தார். கலைகளிலும், திரைப்படங்களிலும் சிறு வயதிலேயே இவருக்கு ஈடுபாடு இருந்தது. இவரது தாத்தா உபேந்திர கிஷோர் சிறந்த எழுத்தாளரும், பதிப்பாளரும் ஆவார். தந்தை சுகுமார் ரேயும், வங்காள இலக்கிய எழுத்தாளரும், கவிஞருமாவார்.

திரைப்பட இயக்குனர் நடிகர், ஓவியர், இசை அமைப்பாளர், கதாசிரியர், திரைக்கதை எழுத்தாளர், ஆடை அமைப்பாளர், புகைப்படக் கலைஞர், கவிஞர், பேரறிஞர் என்றெல்லாம் பெயர் பெற்றுப் பல துறைகளிலும் சிறந்து விளங்கியவர் சத்தியஜித் ரே. பொருளியலில் பல்கலைக்கழகப் பட்டம் பெற்றபின், 1941ல் சாந்தி நிகேதனில் சேர்ந்து, ஓவியத்திலும், நுண் கலை களிலும் தேர்ச்சி பெற்றார்.

முதலில் 1943ல் விளம்பரத் துறையில் பணி புரிந்தாலும் 1950ல் திரைப்படத் துறையில் பயிற்சி பெற லண்டனுக்கு அனுப்பப்பட்டார். அங்கு தங்கி இருந்த ஐந்து மாத காலத்தில் இவர் நூறு ஐரோப்பியத் திரைப்படங்களைப் பார்த்தார். அவர் பார்த்த 'பைசைகிள் தீஃப்' என்ற படம் அவர் மனதைப் பெரிதும் கவர்ந்தது.



சத்தியஜித் ரே

இவர் தயாரித்த 'பதேர் பாஞ்சாலி' என்ற படம் உயர்ந்ததாக விளங்கி, 1956 கான்னெஸ் திரைப்பட விழாவில் பாராட்டையும், விருதையும் பெற்றது. இவர் தயாரித்த மற்ற உயரிய படங்கள் அபராஜிதா (1956), அபுர்சன்சார் (1959), சாருலதா (1964), சத்ரஞ்ச் கே கிலாடி (1977), ஆகந்துக் (1991). குழந்தைகளுக்கான சிறந்த படமென இவர் தயாரித்த 'ஜோய் பாபா பெலுநாத்' என்ற திரைப்படம் விருது பெற்றது. இவர் முப்பது திரைப்படங்களைத் தயாரித்தவர்.

இவர் நல்ல கேலிச் சித்திரக்காரருமாவார். இவர் தம் தாத்தா ஆரம்பித்து, நடுவில் நின்று போன 'சந்தேஷ்' என்ற குழந்தைகளின் பத்திரிகையைத் துவக்கி அதில் தம் கதைகளையும், ஓவியங்களையும் வெளியிட்டு வந்தார். 1992ல் இவருக்கு 'பாரத ரத்னா' விருது அளிக்கப்பட்டது. அதே ஆண்டு ஏப்ரலில் அமரரானார். இவரை யாராலும் மறக்கவே முடியாது தான்!

# மாபெரும் இந்தியச் சுற்றுலா

**அன்பார்ந்த நண்பர்களே!**

இரு அதிர்ஷ்டக்காரர்கள் ஆஷாவும், ஆனந்தும். சிறு வயதினரான அவர்கள் கோடை விடுமுறையில் இந்தியா முழுவதும் சந்தோஷமாகச் சுற்றிப் பார்க்கக் கிளம்புகிறார்கள். அவர்கள் உங்களையும் கூடவே அழைத்துச் செல்ல அழைக்கிறார்கள்.

இந்த அம்புலிமாமா இதழ் உங்களை இந்தியா முழுவதையும் சுற்றிக் காண்பிக்கப் போகிறது. நீங்கள் உங்களுக்கு நன்கு தெரிந்த சில இடங்களையும், தெரியாத சில இடங்களையும் காணப் போகிறீர்கள். நீங்கள் பல புதிய பழக்கங்களையும், நெறிமுறைகளையும் படித்து அறிந்து கொள்ளப் போகிறீர்கள். அவை யாவும் உங்களுக்கு ஆச்சரியத்தையும் அளிக்கும். நீங்களும் அவற்றில் ஈடுபட்டுப் பல புதிய விஷயங்களைப் படித்து, ஓரிரண்டில் கை தேர்ந்தவர்களாகவும் ஆகிவிடுவீர்கள். உங்களுக்கு எங்களது இந்த சுற்றுலா மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

**இது உங்களுக்கு எப்படியெல்லாம் பிடித்திருக்கிறது என்று எமக்கு எழுதுங்கள்.**

நல்லாசிகளுடன்,

Viswam.

**விஸ்வம்.**



''அப்பா! நான் தான் என் வகுப்பில் முதல்'', என்று கூறி ஆடினாள் ஆஷா. ''நானும் தான், என் வகுப்பில் முதல்'', என்று கூறிக் குதித்தான் ஆனந்த். அவர்களது தந்தையும், ''பேஷ்! சொன்னபடி இருவரும் வகுப்பில் முதலாவதாக வந்துவிட்டீர்கள். நானும் வாக்களித்தபடி உங்களைப் பல இடங்களுக்கு அழைத்துச் செல்கிறேன்'' என்றார்.



ஆம்! அவர்கள் தம் வகுப்புகளில் முதலாவதாகத் தேறி வந்தால், கோடை விடுமுறையில் அவர்களுக்கு இந்தியா முழுவதையும் சுற்றிக் காட்டுவதாக அவர்களது தந்தை வாக்களித்திருந்தார். அதனால் அவர்கள் இந்தியாவின் வரைபடத்தை வைத்துக் கொண்டு எந்தெந்த ஊர்களுக்குப் போவது என வரிசையாய்க் குறித் தார்கள். ரயில், விமானம், பஸ் ஆகியவற்றிற்கு முன் கூட்டியே பயணச் சீட்டுகள் வாங்க வேண்டும். சில இடங்களுக்கு மாட்டு



வண்டிகளில் கூடப் போக வேண்டிவரும். தங்குவதற்கு ஹோட் டல்கள், சத்திர அறை கள், கூடாரங்கள் என்று பலவகை.

சில சமயங் களில் திறந்த வெளியில் கூட இருக்க வேண்டி வரலாம்.



## பயணக் குறிப்புகள்

**பயணத்திற்கு நீங்களெல்லாம் தயாரா?**

* நீங்கள் பயணச் சீட்டுகள் பதிவு செய்து அவை சம்பந்தப்பட்ட எல்லா ஆதாரங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள்.
* அதிக பெட்டிகளில்லாமல் வேண்டிய துணிமணிகளை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள்.
* பணத்தை விட 'ட்ராவலர்ஸ் செக்'குகளையும், கிரெடிட் கார்டுகளையும் எடுத்துச் செல்லுங்கள்.
* மருந்துகளையும், முதலுதவி மருந்துப் பெட்டியையும் எடுத்துச் செல்லுங்கள்.
* குளிர்ச்சிக் கண்ணாடி, கிருமியை அழிக்கும் திரவம் ஆகிய தடுப்பு மருந்து களை எடுத்துக் கொள்ளுங்கள்.
* ஒரு பை, தண்ணீர் பாட்டில், டார்ச் லைட், பைனாகுலர், காமிரா, பிலிம் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளவும்.









பல இந்திய சமஸ்தான மன்னர்கள் தம் சமஸ்தானங்களில் தமது ரயில்களை ஓடச் செய்தார்கள். அவர்களுக்குத் தனியான ஆடம்பரப் பெட்டிகள் ரயில்களில் இணைக்கப் பட்டன.

பரோடாவின் கெயிக் வாட் மன்னர் ஒரு சிம்மாசனத்தையே தன் ஆடம்பர ரயில் பெட்டிகளில் எடுத்துச் சென்றார்.

உம். புறப்பட்டுவிட்டார்கள். ஆஷாவும், ஆனந்தும், அவர்களது பெற்றோர்களும் மும்பையில் சத்திரபதி சிவாஜி டெர்மினலுக்குப் போய் ரயிலில் ஏறி உட்கார்ந்தார்கள். 'ரயிலில் பயணம் செய்வதே ஒரு குஷி', என்று ஆஷா கூறவே, ஆனந்த், ''இது ரொம்ப பழைய கம்பார்ட்மெண்டாக இருக்கிறதே!'' என்றான்.

அவனது தந்தையோ, ''இந்திய ரயில்வே மிகவும் பழமை யானது. இந்தியாவில் முதலாவது ரயில் 1853 ஏப்ரல் 16ல் பம்பாயிலிருந்து தானாவிற்கு விடப்பட்டது. அன்று விடுமுறை நாள். நானூறு பயணிகள் சென்ற அந்த ரயிலைப் பார்க்கப் பெரிய கூட்டமே கூடிவிட்டது. அது கிளம்பும் போது, கவர்னரின் பாண்டு குழு இசை முழங்க, இருபத்தொன்று பீரங்கி குண்டுகள் வெடித்தனர்.

அப்போது ஒருவர் அல்சேஷியன் நாயை இழுத்துக் கொண்டு போவதைப் பார்த்த ஆஷா, ''ரயிலில் நாய் கூடப்போகுமா?'' என்று கேட்டாள். அவளது தாயாரும், ''நீயும் உன் நாய்க் குட்டியை ரயிலில் கொண்டு போகலாம். ஆனால் அதற்கு நீ முதல் வகுப்பில் பயணம் செய்வதோடு, இரண்டு படுக்கைப் பகுதியோ அல்லது நான்கு படுக்கைப் பகுதியையோ முன்னதாகப் பதிவு செய்து கொள்ள வேண்டும்'' என்றாள்.



முதலில் சென்றது **குஜராத்தின் அகமதாபாத்**திற்கு. அங்கு **'பதங்'(காற்றாடி) அருங்காட்சியகத்**தில் பலவிதப் பட்டங்களைப் பார்த்தார்கள். அவை ஆயிரத்திற்கும் மேல் இருக்கும். ஆனந்த் அவற்றைப் பார்த்துத் திகைத்து நின்றான். பட்டங்கள் வைக்கப் பட்டுள்ள அருங்காட்சியகங்கள் உலகி லேயே இரு நகரங்களில் தான் உள்ளன. ஒன்று அகமதாபாத், மற்றது





டோக்கியோ. இங்கு காட்டப்பட்ட பட்டங்களில் ஒன்று 450 காகிதத் துண்டுகளால் உருவாக்கப்பட்டது.

அடுத்து சென்ற இடம் **ராஜஸ்தானின் ஜெய்பூர்**. இங்கு சவாய் ஜெய்சிங்கால் கட்டப்பட்ட **ஜந்தர் மந்தர்** என்ற வானிலை ஆராய்ச்சிக் கூடம் உள்ளது. இந்த ஆராய்ச்சிக் கூடம் உள்ளூர் நேரத்தையும், கிரகணங்கள் நேரிடுவது பற்றியும் தெரிவித்து வந்தது.



'எதையாவது பலமாகப் பிடித்துக் கொள் ளுங்கள். இல்லாவிட்டால் காற்று உங்களை அடித்துக் கொண்டுபோய் எங்கேயோ போட்டுவிடும்'' என்று வேடிக்கையாக ஆஷாவின் தாயார் கூறினாள். ஆம், அப்போது ஜெய்பூரில் **ஹவா மஹலில்** இருந்தனர். அங்கு நல்ல காற்று வீசிக் கொண்டிருந்தது. ஹவா மஹல் என்ற அரண்மனை ஐந்தடுக்கு மாளிகை. அதில் 953 சிறிய ஜன்னல்கள் உள்ளன. இதன் ஜன்னல்களின் அமைப்பாலும், சாளரங்களாலும் இந்த அரண்மனைக்குள் எப்போதும் காற்று 'சில்'லென்று வீசிக் கொண்டிருக்கும்.










''இப்போது ஒரு புனிதமான இடத்தில் நாம் இருக்கிறோம்'', எனக் கூறினாள் ஆனந்தின் தாயார். ''இங்கே உரக்கப் பேசக்கூடாது, கனைக்கக் கூடாது'' என்றும் எச்சரித்தாள். ஆஷாவும், ஆனந்தும் அங்கு நிலவிய அமைதியைக் கண்டு அதற்கு ஏற்ப நடந்து கொண்டார்கள்.

''நமது மதச் சார்பின்மைக்கு **அமிர்தசரஸின் இந்த பொற்கோவில்** ஓர் எடுத்துக்காட்டு'' என்று அவர்களது தந்தை மெல்லிய குரலில் கூறினார். ''இதற்கான நிலத்தை முகலாய மன்னர் அக்பர் அளித்தார். குரு ராம்தாஸ் 1577ல் நிலத்தைச் சமப்படுத்தினார். 1589ல் இக்கோவிலைக் கட்ட அடிக்கல்லை மியான்மீர் என்ற முஸ்லிம் ஃபக்கீர் நாட்டினார்.'' என்று அவர்களின் தந்தை மேலும் கூறினார்.

பொற்கோவிலுள் பிரதான கோவிலான 'ஹர்மந்தர் சாஹப்' என்றப் பகுதியை அடைந்தார்கள். இங்கு ஓர் அழகிய சிறு மண்டபத்தில் சீக்கியர்களின் வேத நூலான ***'கிரந்த் சாஹப்'*** வைக்கப்பட்டுள்ளது. அதன்முன் கீர்த்தனைகளையும், பஜனைப் பாடல்களையும் ஒரு குழு பாடிக் கொண்டிருந்தது.

அவர்களது தந்தை ***'கர சேவை'*** என்று பொதுப் பணியில் ஈடுபட்ட போது ஆஷாவும், ஆனந்தும் அவரோடு சேர்ந்து, துடைப்பத்தால் பெருக்கினார்கள். அவர்களது தந்தை ஆலயத்திற்கு வந்தவர்கள் விட்டுவைத்த காலணிகளை எடுத்து ஒழுங்காக வைத்தார். அவர்களது தாயார் பெரிய சமையற்கூடத்துள் சென்று வேலையில் ஈடுபட்டார்.

எல்லாப் பணிகளும் முடிந்ததும், எல்லோரும் மற்றும் பலருடன் சேர்ந்து உட்கார்ந்து 'லங்கர்' என்ற பொது விருந்தில் உட்கார்ந்து சாதாரண சப்பாத்திகளை 'சப்ஜி'யுடனும், 'தால்' லுடனும் சேர்த்து, ருசித்து உண்டார்கள்.





வட இந்தியாவின் பல வனவிலங்கு சரணாலயங்களைப் பார்க்க ஆஷாவும், ஆனந்தும் துடிதுடித்துக் கொண்டிருந்தார்கள். ஏனெனில் அங்கெல்லாம் மிருகக் காட்சி சாலைகளில் உள்ளது போல மிருகங்கள் கூண்டுகளில் அடைக்கப் பட்டிருக்கவில்லை. காடுகளிலுள்ளது போல இருந்தன. அவர்கள் அவ்வித ஐந்து சரணாலயங்களையும், பூங்காக்களையும் கண்டனர்.







ஏப்ரல் – ஜூலை மாதங்களில் குலூ பள்ளத்தாக்கிலுள்ள **மாபெரும் இமாலய தேசியப் பூங்கா**வைக் காணச் செல்வது ஏற்றது. பனிப்புலி, மலை ஆடு, யாக், கொக்குகள், கருப்பு, பழுப்பு நிறக் கரடிகள் என்பனவற்றை இங்கு காணலாம்.



சிவாலிக் மலை அடிவாரத்தில் அமைந்தது. **கோர்பெட் தேசியப் பூங்கா** ஆங்கிலேயரும், பிராணிகள் நலன் விரும்பியவருமான ஜிம்கோர்பெட்டின் பெயரில் இப்பூங்கா அமைக்கப்பட்டது. இங்கு செல்ல ஏற்ற காலம் பிப்ரவரி முதல் மே வரையாகும். இங்கு புலி, யானை, சிறுத்தைப் புலி, கரடி, சம்பார், நீல்காய், நான்கு கொம்பு மிருகம் ஆகியவற்றைக் காணலாம்.



இமயமலையின் அடிவாரத்திலுள்ள **துத்வா தேசியப் பூங்கா** முன்பு மான்களைக் காக்கவே அமைக்கப்பட்டது. பின்பு, அதில் புலி, வரிப்புலி, காண்டாமிருகங்கள் சேர்க்கப்பட்டன. பலவிதப் பறவைகளையும் இங்கு காணலாம்.



**பந்தாவ்கட் தேசியப் பூங்கா**வைக் காண பிப்ரவரியிலிருந்து ஜூன் வரை ஏற்ற காலம். இங்கு புலி, சிறுத்தை, சம்பார், நீல்காய் மற்றும் பலவிதப் பறவைகளைக் காணலாம்.



**பலமாவ் தேசியப் பூங்கா** 1973 புலிகள் பராமரிப்புத் திட்டத்தில் சேர்க்கப்பட்டது. இங்கு மிருகங்களையும், பறவைகளையும் ஹாதி பஜ்வா, மதுசன் ஆகிய இரு உயர் கோபுரக் கட்டடங்களின் மீதிருந்து காணலாம். இங்கு செல்ல அக்டோபரிலிருந்து மே ஏற்ற காலம்.





ஆஷாவும், ஆனந்தும் தம் பஸ் நின்றதும் குதித்துச் சுற்றிலும் பார்த்தார்கள். அவர்கள் இறங்கிய இடம் பீஹார் மாநிலத்தின் ஒரு புனிதத் தலம். ஆனந்த் அந்தப் புனிதத் தலத்தைச் சம்மந்தப்படுத்தி இந்தப் படத்தை வரைந்தான். நீங்கள் புள்ளிகள் வைக்கப்பட்ட பகுதிகளில் வண்ணம் தீட்டினால் அது என்ன என்று தெரிந்துவிடும். அதிலிருந்து அவர்கள் சென்ற இடம் எது என்று தெரிந்துவிடும்.

பழமையிலிருந்து புதுமைக்குச் செல்கிறார்கள். அவை எஃகாலைகள் உள்ள இடங்கள். அவற்றின் பெயர்கள் ஒழுங்காக இல்லை. அவற்றை நேராக்குங்கள்!



### விடைகள்

வண்ணம் தீட்டக் கிடைப்பது புத்தர் பீடம். அவர்கள் சென்ற இடம் புத்தகயா.

எஃகு ஆலை நகரங்கள் :–

1. பொகாரோ
2. ஜாம்ஷெட்பூர்
3. துர்க்காபூர்
4. பிலாய்
5. ராவுர்கேலா





கோல்கத்தாவில் அது அவர்களுக்கு முதல் நாள். கோடையின் வெப்பம் சகிக்க முடியவில்லை. ஆஷாவுக்கும், ஆனந்திற்கும் ஒரே தாகம், களைப்பு வேறு. அவர்களுடைய தகப்பனாரின் நண்பரான சாட்டர்ஜி மாமா அவர்களிடம், ''வாருங்கள். வங்காள இனிப்புகளைச் சுவைக்கலாம். அப்போது உங்கள் களைப்பு பறந்துவிடும்'' என்றார். ஆஷா குதித்தவாறே, ''நீங்கள் ரசகோல்லாவைத் தானே குறிப்பிடுகிறீர்கள்?'' என்று கேட்டாள். அவரும் சிரித்தவாறே, ''அது தமிழில் ரசகுல்லா. மேலும், ரச போக், ரச மலாய், கீர்மோகன், சம்சம், மிஸ்டி தொயி'', என்று பெயர்களை அடுக்கலானார்.

ஆனந்த் அகலமாய்க் கண்களை விரித்தவாறே, ''அடேயப்பா! இவ்வளவு இனிப்புகளை வங்காளிகள் தயாரிக்கிறார்களா?'' என்று கேட்டான்.





ரசகோல்லாவை முதலில் செய்தவர் சுதநிதியைச் சேர்ந்த நபின் சந்திரதாஸ் 1868ல் அவர் பாலைத் திரிக்க வைத்து, நீரை வடி கட்டிக் கொட்டிவிட்டு, கிடைத்த திரிந்த பண்டத்தைச் சிறுசிறு உருண்டைகளாக்கி, அவற்றைச் சர்க்கரைப் பாகு நீரில் போட்டு ஊற வைத்தார். இது மிருதுவானதாய் சர்க்கரை நீர் கோர்த்துக் கொண்டு ருசியானதாக இருந்தது. இதுவே ரசகோல்லா.

லேடிகேனி என்பது பால்கோவா உருண்டை பொரிக்கப்பட்ட மற்றொரு இனிப்பு. இதில் ரவையும் சேர்க்கப் பட்டிருக்கும். பொரித்த உருண்டை சர்க்கரைப் பாகு நீரில் ஊற வைக்கப்படும். இந்திய வைஸ்ராய் லார்ட்கேனிங்கின் மனைவி லேடி கேனிங்கின் பெயரில் இது லேடிகேனி எனக் கூறப்படுகிறது.

**மிஸ்டி தொயி செய்யும் முறை :-**



ஒரு லிட்டர் பாலை சுண்டக் காய்ச்சி அரை லிட்டராக ஆக்கவும்.



ஒரு டேபிள் ஸ்பூன் சர்க்கரையை கொஞ்சம் நீரில் கரைத்து சூடாக்கி இளம் பாகாகச் செய்யவும்.



அந்தப் பாகு சூடாக இருக்கும் போது பாலில் விடவும்.



அதில் புதிதாக உறைந்த தயிரை விடவும்.



நன்றாகக் கலக்கி சிறு மண் சொப்புகளில் ஊற்றி காற்றுப்பட வெளியில் வைக்கீவும்.



சில மணி நேரங்களுக்குப் பிறகு எடுத்தால், மிஸ்டி தொயி சாப்பிடத் தயாராகி இருக்கும்.



வடகிழக்கு இந்திய மாநிலங்கள் மலைகள், பசுமையான பள்ளத்தாக்குகள் தேயிலைத் தோட்டங்கள், குளிர்ச்சியான சுற்றுப்புறம், மெல்லிய கீதம், கண்கவர் நடனம் எனப் பலவற்றைக் கொண்டவை. ஆஷாவும், ஆனந்தும் ஆர்வத்துடன் இப்பகுதிகளுக்குச் சென்று வந்தார்கள். அவர்கள் எங்கே எல்லாம் போனார்கள் என்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா? அவற்றைக் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்.

1. சாங்கை என்ற மான் இங்கு நடனமாடுவதைக் காணலாம்.

   ..............................

2. இங்குள்ள மூங்கில்கள் நடனத்திற்கு ஏற்ப தாளம் போடப் பயன்படுகின்றன.

   ..............................

3. மிக மிக நீளமான நதி இங்கு பாய்கிறது.

   ..............................

4. ஆசியாவிலேயே மிகப் பெரிய தேயிலைத் தோட்டங்கள் உள்ள பகுதி இது.

   ..............................

5. சீனாவிலிருந்து இந்தியாவில் பிரம்மபுத்திரா நதி இங்கு தான் நுழைகிறது.

   ..............................

6. ஆசியாவில் இதைவிடப் பெரிய பௌத்த மடத்தைக் காண முடியாது. இங்கு தான் ஆறாவது தலாய் லாமா பிறந்தார்.

   ..............................

7. இங்கு எப்போது பார்த்தாலும் மழை. உலகிலேயே மிக அதிக அளவு மழை இங்கு தான் பெய்கிறது.

   ..............................

8. மேகாலயாவில் இந்த இடத்துக் குளிர்ச்சியான காற்று உங்களைப் பரவசப்படுத்தும்.

   ..............................

9. இங்கு ஒற்றைக் கொம்பு காண்டாமிருகம் தடையின்றித் திரிகிறது.

   ..............................

நீங்கள் ஊகித்தது சரியா என்று அறிய இந்தப் பக்கத்தைத் தலைகீழாகப் பிடித்துப் படித்துப் பாருங்கள்.



விடைகள் :

1. கைபுலாம் 'ஜோ'
2. ஐய்ஜ்வால்
3. மஜுலிதீப்
4. மனலோர்
5. லோஹித்
6. டவாங்க்
7. சிரபுஞ்சி
8. ஷில்லாங்
9. கஜிரான்கா




ஆஷாவும், ஆனந்தும் பரத நாட்டியத்தை ஓரளவு கற்றவர்கள். அதனால் அவர்களது தந்தை அவர்களுக்கு வேறு நாட்டிய வகைகள் சிலவற்றைக் காட்ட விரும்பினார். ஆஷா தான் பார்த்த ஒரு கிராமிய நடனத்தைக் கற்க விரும்பினாள்.



**மணிப்பூரில்** மெய்டெய்கள் ஆடும் அழகிய மணிப்புரி நடனத்தை அவர்கள் கண்டு களித்தார்கள். அது கிருஷ்ண பகவானின் குழந்தைப் பருவ லீலைகளை விவரிக்கும் *கிருஷ்ண லீலா!* கண்ணைப் பறிக்கும் கண்ணாடிகள் வைத்துத் தைத்த ஆடைகளில் வந்து கலைஞர்கள் நடனம் ஆடினார்கள்.



**புவனேஸ்வரில்** அவர்கள் பார்த்த நடனம் ஒடிஸி. இது இந்தியாவின் மிகப் பழமையான நடனக் கலை என்று கருதப்படுகிறது. கி.மு. 200ல் குடையப்பட்ட ஒரிஸ்ஸா குகைகளில் இந்த ஒடிஸி நடனக் காட்சிகள் செதுக்கப்பட்டுள்ளன. அதன்பின் வேறு இரு வகை நடனங்களை அவர்கள் பார்த்தார்கள். அவை **சஹு** என்பனவாம். இது கிழக்கிந்தியப் பகுதியில் பெயர் பெற்ற நடனம். இந்த நடனக் கலைஞர்கள் தம் உடலை மாலிஷ் செய்து கொண்டு பலவித தேகப் பயிற்சிகளைச் செய்து விட்டு இந்த நடனக் கலையைப் பயில்கிறார்கள். இதில் துள்ளல், குதித்தல், கரணம் போடுதல் போன்றவை உள்ளன. இவர்கள் *ராமாயணத்திலிருந்தும், மகாபாரதத்திலிருந்தும்* நிகழ்ச்சிகளை நடனமாடிக் காட்டுகிறார்கள்.



**புரிலியா சஹு** என்பது மேற்கு வங்கத்தின் ஒரு வகை நடனம். இதில் ஐந்தாறு ஆண்கள் முகமூடி அணிகிறார்கள். அவை துணியாலும், களிமண்ணாலும் செய்யப்பட்டவை.

பீஹாரின் **மயூர் பஞ்ச் சஹு** நடனம் சித்திரைத் திருவிழாவில் ஆடப்படுவது. இது பல அழகிய நடனமுறைகளைக் கொண்டது.






**ஒரிஸ்ஸாவின் சம்பல்பூர்** சிறிய ஊர்தான். ஆனால் கைத்தறிப் புடவைகளுக்குப் பெயர் பெற்ற இடமாகும். ஆஷாவின் தாயார் அவ்வூர் புடவைக் கடை ஒன்றினுள் சென்றவள் பல மணி நேரமாகியும் அங்கிருந்து வரவே இல்லை. எவ்வளவு ரகத்தில் புடவைகள்! ஆஷாவும், ஆனந்தும் அவர்களது தந்தையும் வெகு நேரம் காத்து அலுத்துப் போனார்கள். முடிவில் ஆஷாவின் தாயார் இரு கைகள் மீதும், அக்கடையில் வாங்கிய புடவைகளை அடுக்கி எடுத்துக் கொண்டு ஒரு வழியாகக் கடையிலிருந்து வெளியே வந்தாள்.

சம்பல்பூரிலிருந்து **கோண்ட்** ஆதிவாசிகள் வசிக்கும் **சத்தீஸ்கட்** மாநிலத்திற்குச் சென்று அதன் தலைநகரை அவர்கள் அடைந்தார்கள். அவர்கள் ஓரிடத்தில் அந்த ஆதிவாசிகளின் சந்தை நடந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். அங்கு மஹுவா மலர்கள், தேன், துணிமணிகள், தீப்பெட்டி, உப்பு, மிளகாய் முதலியவை இருந்தன.





ஆஷாவும், ஆனந்தும் அந்தச் சந்தையைச் சுற்றிப் பார்த்தார்கள். அவர்கள் தம்மோடு வந்த பட்நாயக் மாமாவிடம், ''இதென்ன பூக்கள்? இதுவரை நாங்கள் பார்த்ததே இல்லையே!'' என்று கேட்டார்கள்.

அவரும், ''இந்த மலர்கள் இந்த கோண்ட் ஆதிவாசிகளின் வாழ்க்கையில் மிகவும் முக்கியத்துவம் பெற்றவை. அவர்கள் இந்த மலர்களிலிருந்து கள் இறக்கி, அதனைத் தம் தேவதைக்கு அர்ப்பணம் செய்கிறார்கள். இதன் பழங்களைச் சாப்பிடுகிறார்கள். இந்தியாவில் மிக அதிக எண்ணிக்கையிலுள்ள ஆதிவாசிகள் கோண்ட்களே. இவர்கள் சத்தீஸ்கட், ஆந்திரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் பரவி இருக்கிறார்கள்.''

சந்தையைப் பார்த்துவிட்டு, கோண்ட்கள் சாப்பிடும் உணவைச் சுவைத்துப் பார்த்தார்கள். அவர்கள் சம்பல்பூருக்குத் திரும்பி வந்தார்கள்.



அடுத்து அவர்கள் சென்ற இடம் **ஆந்திரப் பிரதேசத்தில்** உள்ள **திருப்பதி**. மிகமிகப் பணக்காரக் கோயில் இது. கடல் மட்டத்திற்கு மேல் 840 மீ. உயரமுள்ள இக்கோவிலிலுள்ள பகவான் வெங் கடேஸ்வரரைத் தரிசிக்க உலகின் பல பாகங்களிலிருந்து மக்கள் வந்து கொண்டே இருக்கிறார்கள். அங்கு பலருடைய தலைகள் மொட்டையாக இருப்பது கண்டு ஆஷா, ''ஏனம்மா இங்கே பல பேர்களுடைய தலைகள் மொட்டையாக இருக்கின்றன?'', என்று கேட்டாள்.

ஆஷாவின் தந்தை, ''இங்கு வரு பவர்கள் தாம் மொட்டை அடித்துக் கொண்டு, இந்த பகவானைத் தரிசிப்பதாகப் பிரார்த்தனை செய்து கொள்கி றார்கள். அதனால் தான் இங்கு பல மொட்டைத் தலைகளைக் காண முடிகிறது.'' எனக் கூறி விட்டு, ''இருங்கள். நான் போய் லட்டு வாங்கி வருகிறேன். அவை புகழ் பெற்றவை. மிகவும் ருசியாக இருக்கும்'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

அடுத்து அவர்கள் சென்ற ஊர் **தஞ்சாவூர்**. அங்கேயுள்ள **பிரகதீஸ்வரர் ஆலயத்தைப்** பார்த்து அவர்கள் பிரமித்து நின்றார்கள். கருங்கற்களால் கட்டப்பட்டு 66 மீ. உயரம் கொண்டது இக்கோயில். அதை அவர்கள் பார்த்துக் கொண்டிருந்த போது ஆஷா திடீரென எங்கோ போய்விட்டாள்.

அவளை ஆனந்தும், அவளது தந்தையும் தேடலானார்கள். அவளது தாய் பதறிப் போனாள். இதற்குள் ஆஷா ஓரிடத்தில் நின்று எதையோ உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருப்பதை அவளது தந்தையும், ஆனந்தும் கண்டார்கள். அங்கு தரையில் ஒரு மாமி புள்ளிகள் வைத்துக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். ஆனந்தையும், அவனது தந்தையையும் கண்ட அந்த மாது தனக்குத் தெரிந்த அரைகுறை ஆங்கிலத்தில், ''இதற்குப் பெயர் கோலம். அரிசி மாவால் இது போடப் படுகிறது. கணக்காகப் புள்ளிகளை வைத்து, அவற்றைக் கோடுகளால் இணைக்க வேண்டும்'' என்று கூறினாள். ஆஷா தானும் கோலம் போடக் கற்றுக் கொள்ளப் போவதாகக் கூறினாள். நீங்களும் கற்கலாமே!

ஆஷாவும், ஆனந்தும் அவர்களது பெற்றோர்களும் **கேரளத்தில்** உள்ள கொச்சிக்குச் சென்றார்கள். இங்குள்ள **செயின்ட் பிரான்சிஸ் சர்ச்** ஐரோப்பிய முறையில் கட்டப்பட்டது. வாஸ்கோடகாமாவின் உடல் அங்கு தான் புதைக்கப் பட்டதாம். ஐரோப்பாவில் கிருஸ்துவ மதம் பரவுவதற்கு முன்பே இங்கு அது பரவிவிட்டது.

ஏசு கிருஸ்துவின் சீடரான செயின்ட் தாமஸ் இங்கு கி.பி.52ல் வந்தாராம். அவர் கேரளக் கடற்கரை ஓரமாகப் பல இடங்களில், பல சர்ச்களை நிறுவினாராம்.





ஆஷாவின் தாயார், ''கேரளாவில் எல்லா மதத்தவரையும், இனத்தவரையும் காண முடியும். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிருஸ்துவர் யூதர்கள், இன்னும் ஜைனர்கள் போன்றவர்களையும் காணலாம். கொல்லத்தில் பதிநான்காம் நூற்றாண்டில் கட்டப்பட்ட ஐந்து மசூதிகள் இன்னமும் உள்ளன.






கேரளாவிலிருந்து அவர்கள் **கர்நாடக** மாநிலத்தில் **சிரவண பெலகோலா**விற்குச் சென்றார்கள். இங்கு ஒரே கல்லில் செதுக்கப்பட்ட கோமடீஸ்வரரின் 17 மீ. உயரச் சிலை உள்ளது. இது ஜைனர்களின் புனிதத் தலம். கோமடீஸ்வரரின் சிலை 26 கி.மீ. தூரத்தில் இருந்தால் கூட நன்கு தெரியும்.

இம்மாநிலத்தில் **பீஜப்பூரில்** உள்ள **கோல்கும்பஜ்** உலகப் புகழ் பெற்றது. இங்கு ஒரு மூலையிலிருந்து மெதுவாகப் பேசினால் கூட எதிர்முனையில் தெளிவாகக் கேட்கும். இக்கட்டடத்தின் மீதுள்ள உருண்டை வடிவக் கட்டடம் 42 மீ. விட்ட அளவு கொண்டது. இதைத் தாங்கி நிறுத்த எவ்விதத் தூணும் கட்டப்படவில்லை..









இப்போது அக்குடும்பம்
இந்நாட்டின் மிக அழகிய, கவர்ச்சிகரமான
இடத்தை அடைந்துள்ளது. இந்தப் படத்தைக் கவனித்துப்
பார்த்தால் அவர்கள் எந்தப் பகுதியில் இருக்கிறார்கள்
என்று ஊகித்துவிடலாம். இந்தப் படத்தில் ஒரு பகுதி
வண்ணம் கொடுக்கப்படலாம். அதைச்
செய்யுங்கள் பார்க்கலாம்!
BAR
VIVA O CARNAVAL
HOTEL MAR
விடை :
ஆஷாவும், ஆனந்தும்
கோவாவில்.

ஒரு மாதம் ஓடிவிட்டதே! அநேகமாக அவர்களது சுற்றுலா முடிந்துவிட்டது. ஆனந்தின் தந்தை அனைவருடனும் காரில் மும்பைக்குத் திரும்பும் போது, மகாராஷ்டிராவின் யőப்ő மாவட்டத்தில், ஓரிடத்தில் நிறுத்தி, ''இப்போது நம் ஊரருகே நீங்கள் இதுவரை அறிந்திரா்த ஒன்றைக் காட்டப் போகிறேன்.'' என்று கூறிக் காரை ஓரிடத்தில் நிறுத்தச் சொன்னார். கார் நின்றதும் ஒரு கூட்டம் அதைச் சூழ்ந்து கொண்டது.

அப்போது ஆனந்தின் தந்தை ஆஷாவிடமும், ஆனந்திடமும், ''இவர்கள் வார்லி இனத்தவர். இவர்கள் மகாராஷ்டிரத்திலும், குஜராத்திலும் வாழ்கிறார்கள்.'' எனக் கூறி, அவர்களில் ஒருவனிடம் ஏதோ சொன்னார். அவன் அவர்களை எல்லாம் ஒரு சிறு வீட்டிற்குள் அழைத்துச் சென்றான். அவ்வீட்டுச் சுவர்களில் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. ஆனந்தின் தந்தை அவற்றைக் காட்டி, ''இவற்றை வார்லி ஓவியம் எனக் கூறுகிறார்கள்'' என்றார்.

ஆஷாவும், ஆனந்தும் அவற்றை வியப்புடன் பார்த்தார்கள். மலைச் சாதியினரின் தேவதைகள், மிருகங்கள், மரங்கள், மலைவாசிப் பெண்கள் செய்யும் அன்றாட வேலைகள், வேட்டையாடுதல், வயல்களில் வேலை செய்தல், நடனம் என்று பலவகைப்பட்ட சித்திரங்கள் வரையப்பட்டிருந்தன. அவை யாவும் வெள்ளை நிறத்தில் தான் இருந்தன. இவர்கள் அரிசி மாவை நன்கு சலித்து, வெள்ளை வண்ணக் குழம்பைத் தயாரித்துக் கொள்கிறார்கள். மூன்றங்குலக் குச்சியில் பேனா தயாரிக்கிறார்கள். இந்தக் கூரிய பேனாவால் தான் முக்கோணம், நேர்கோடு ஆகியவவைகளில் இச்சித்திரங்களை வரைகிறார்கள்.

இந்த இந்தியச் சுற்றுலாவை நீங்கள் விரும்பினீர்களா?







நீங்களும் இவற்றில் ஒன்றைச் செய்யலாமே!




# கொள்கையைக் கைவிடாதே!

வேலுசாமி விவசாயத்தில் கை தேர்ந்தவன். அதனால் ஊரார் அவனிடம் விவசாயம் பற்றித் தம் பிரச்சினைகளைக் கூறி, அவன் சொல்கிறபடி நடந்து, நல்ல பலன்களை அடைந்து வந்தார்கள். வேலுசாமியின் மகன் சிவசாமி. நல்ல புத்திசாலி. அவன் பட்டணத்திற்குப் போய் படித்துவிட்டு வந்தால் அவன் விவசாயத்தை நன்கு கவனிப்பான் என்று எண்ணி, வேலுசாமி சிவசாமியைப் பட்டணத்திற்கு அனுப்பினான்.

முன் காலத்தில் குருகுலங்கள் எங்கெங்கோ இருந்தன. அவற்றில் சேர்ந்து படிப்பவர்களும் குறைவாகவே இருந்தனர். ஆகையால் நகரங்கள், பெரிய பட்டணங்கள் என்று ஏற்பட்டதும், கல்வி நிலையங்கள் பல தோன்றின. அவற்றில் சேர்ந்து படிப்போரின் எண்ணிக்கையும் அதிகமாயிற்று. அவற்றில் வேதம், சாஸ்திரம் என்று மட்டுமல்லாமல் விவசாயம், கட்டடக் கலை, நீர்ப்பாசனம், சுகாதாரம், மருத்துவம் என்று பல விதத் துறைகளிலும் கல்வி போதிக்கப்பட்டு வந்தது.

சிவசாமி பட்டணத்திற்குப் போய், ஒரு கல்வி நிலையத்தில் சேர்ந்து, விவசாயத்தைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் படிக்கலானான். விவசாயத்தில் பல புதிய முறைகளையும், வழிகளையும் அவன் தெரிந்து கொண்டான். அவனது அந்தப் படிப்பு முடிய ஐந்து வருடங்களாகின. அதன்பின் அவன் தன் கிராமத்திற்குப் போகாமல் பட்டணத்திலேயே இருந்து விட விரும்பினான். அவன் தன் தந்தையிடம், ''அப்பா! நான் பட்டணத்தில் ஒரு தொழிற்சாலையை அமைக்க விரும்புகிறேன். விவசாயத்தால் கிடைக்கும் தானியங்களைக் கொண்டு, மக்களைக் கவரும் பல வித தின்பண்டங்களைத் தயாரித்து விற்கப் போகிறேன். இதனால் விவசாயத்தில் கிடைக்கும் லாபத்தை விடப் பல மடங்கு லாபம் அடைய

– பாபநாசம் சாமா –



லாம்'', என்றான்.

வேலுசாமியோ, ''மகனே! விவசாயம் நம் பரம்பரைத் தொழில். இதைவிட்டு புதிய தொழிலை ஆரம்பித்து, நீ லாபம் அடையப் போவதாகக் கூறுவது, உனக்கு உலக அனுபவம் போதாது என்பதையே காட்டுகிறது'' என்றான். சிவசாமியோ, தான் பட்டணத்தில் புதிதாகத் தொழில் செய்யத்தான் போவதாகப் பிடிவாதமாகக் கூறவே, வேலுசாமியும், ''சரி. நீ புதிதாகத் தொழில் தொடங்கக் குறைந்தது லட்சம் வராகன்களாவது வேண்டுமே. அதற்கு எங்கே போவது?'', என்று கேட்டான்.

சிவசாமியும், ''பட்டணத்தில் வட்டிக்குப் பணம் கொடுக்க எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள். அவர்களில் யாரிடமிருந்தாவது நம் நிலத்தின் பேரில் கடனை வாங்கலாம். தொழிலில் கிடைக்கும் அமோக லாபத்திலிருந்து கடனை வெகு எளிதாக அடைத்து விடலாம்'' என்றான். வேலுசாமியோ, ''நான் இதுவரை கடன் வாங்க யார் முன்னாலும் போய் நின்றதில்லை. நீ கேட்கும் தொகையைக் கடனாகக் கொடுக்க யாராவது தயாராக இருந்தால் சொல். அவரிடம் நான் பேசுகிறேன்'' என்றான்.

சிவசாமியும், ''நீங்கள் உங்கள் பெரியப்பாவின் மகள் விமலாவின் திருமணச் செலவை எல்லாம் ஏற்று, அவளுக்குத் திருமணம் செய்து வைத்தீர்களே! இப்போது அவளும், அவள் கணவனும் நல்ல நிலையில் இருக்கிறார்கள். லட்ச லட்சமாய் சம்பாதித்துப் பணம் சேர்த்து வைத்திருக்கிறார்கள். அவளிடம் கேட்டால் பணம் கட்டாயம் கிடைக்கும்'' என்றான். வேலுசாமியும் சிரித்துக் கொண்டே, ''சரி, வா! கேட்டுப் பார்க்கலாம்'', என்று கூறித் தன் மகனை அழைத்துக் கொண்டு பட்டணத்திலுள்ள விமலாவின் வீட்டிற்குச் சென்றான்.

விமலா அவர்களை வரவேற்று நன்கு உபசரித்தாள். வேலுசாமியும் சற்றும் தாமதிக்காமல் தான் வந்த காரணத்தைக் கூறினான். அதுகேட்டு விமலாவின் மகிழ்ச்சி மறைந்தது. அவள் தயங்கியவாறே, ''என் கணவர் யாருக்கும் கடன் கொடுக்கக் கூடாது என்ற கொள்கையைக் கொண்டவர். ஆனால், அவரிடம் யார் கடன் கேட்டாலும் கொடுக்க முடியாது

என்று கூறாமல், ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி அனுப்பி விடுவார். நீங்கள் ஒரு நாள் பூராவும் அவர் பக்கத்தில் உட்கார்ந்து கவனித்துப் பாருங்கள். கடன் கேட்பவர் எதற்காகக் கடன் வாங்குகிறார் என்பதைக் கேட்டுவிட்டு, அவருக்குக் கடன் கொடுக்காமல் என்ன சொல்லி அனுப்புகிறார் என்று நீங்களே பாருங்கள். எனக்குத் தெரிந்து அவர் இதுவரை யாருக்கும் கடனே கொடுத்ததில்லை'' என்றாள்.

அவள் கூறியபடியே, வேலுசாமி மறுநாள் முழுவதும் விமலாவின் கணவனின் பக்கத்தில் அமர்ந்து, என்ன நடக்கிறது என்று கவனிக்கலானான்.



ஒருவன், தன் பெண்ணின் கல்யாணத்திற்கு வரதட்சிணை கொடுப்பதற்குக் கொஞ்சம் பணம் குறைந்ததால் அந்தத் தொகையைக் கடனாக வாங்க, விமலாவின் கணவனிடம் வந்தான். அவனும், ஏன் கடன் வாங்குகிறான் என்று தெரிந்து கொண்டு, ''வரதட்சிணை வாங்குவதும், கொடுப்பதும் தப்பு. நீ இப்போது பார்த்திருக்கும் இடம் உனக்கு ஏற்றதில்லை. இப்போது வரதட்சிணை இவ்வளவு வேண்டும் என்று கேட்டு உன்னைப் பிழிந்து எடுப்பவர்கள், இனிமேல் போகப் போக என்னவெல்லாம் கேட்பார்களோ? அதனால் இந்த இடத்தை விட்டு விட்டு, உன் அந்தஸ்திற்கு ஏற்ற மாப்பிள்ளையாகப் பார்த்துத் திருமணத்தை நடத்து'', என்று கூறி அனுப்பி விட்டான்.

இன்னொருவனும், தன் மகளின் கல்யாணத்திற்காகக் கடன் கேட்கவே, விமலாவின் கணவன் அவனிடம், ''வீட்டில் கல்யாணம் செய்யத் தக்க மகனை வைத்துக் கொண்டிருக்கிறாயே! அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்து வரதட்சிணை வாங்கி, உன் மகளின் திருமணத்தைச் செய்துவிடு'', என்று கூறினான்.

அவனோ ''வரதட்சிணை வாங்க மாட்டேன் என்பது என் கொள்கை அதனால் என் மகனின் கல்யாணத்தில் வரதட்சிணையை வாங்கி நீங்கள் சொல்வது போல என் மகனின் கல்யாணத்தைச் செய்ய மாட்டேன். என் கொள்கையை விடவே மாட்டேன்'' எனவே, விமலாவின் கண

வனும், ''யாருக்கும் கடன் கொடுக்கக் கூடாது என்பது என் கொள்கை. நானும் என் கொள்கையை விட மாட்டேன்'', எனப் பதில் கூறி அனுப்பிவிட்டான். இப் படியே பல பேர் கடன் பெற வர, விமலாவின் கணவன் ஏதோ ஒரு பதில் கூறி, கடன் கொடுக்காமல் சமாளிப்பதை வேலு சாமியும், சிவசாமியும் பார்த்தார்கள். சிவசாமி தன் தந்தையிடம், ''அப்பா! இவரிடம் கடன் பெற முடியாது. உன் கொள்கைப்படி விவசாயமே செய்ய லாம். வா, நம் ஊருக்குப் போய் விடலாம்'' என்றான்.

வேலுசாமியோ, ''பொறு. நான் கடன் கேட்கிறேன். அவன் என்ன பதில் சொல்கிறான் என்று பார்க்க லாம்'' எனக் கூறி, விமலாவின் கண வனிடம் அன்றிரவு தன் மகன் ஒரு புதிய தொழில் ஆரம்பிக்க விரும் புவதைக் கூறி லட்சம் வராகன்கள் கடன் கேட்டான்.

விமலாவின் கணவனும், ''வியா பாரமா? உங்கள் மகன் விவசாயம் என்ற உங்கள் கொள்கையைக் கெடுத்து விடுவான் போலிருக்கி றதே. இதற்கு நான் உடந்தையாக இருக்க மாட்டேன்'' என்றான். சிவ சாமி, ''அப்படியானால் தொழில் செய்ய வேண்டுமென்று நான் நினைப்பது சரியில்லையா?'' என்று சற்றுக் கடுப்புடன் கேட்டான்.

விமலாவின் கணவன், ''உன் கொள்கை பிறரது கொள்கையைத் தகர்ப்பதானால், அதைத் தூக்கி எறிய வேண்டியது தான்'' என்றான். அப் போது தான் சிவசாமிக்குத் தன் கொள்கைப்படி நடக்க வேண்டு மென்றால், தன் தந்தையிடம் பணம் கேட்கக் கூடாது என்று புரிந்தது.

அவன் ''நீங்கள் யாருக்கும் கடன் கொடுக்காமல், அவர்கள் பிரச்சி னைக்கு ஒரு வழி கூறுகிறீர்கள். என் தந்தையும், தம் பிரச்சினைக்கு வழி காணத் தங்களிடம் கடன் கேட்டார். உங்கள் பதில் என் கண்களைத் திறந்து விட்டது. நான் புதுத் தொழில் ஆரம் பிக்கும் எண்ணத்தைக் கைவிட்டு, எங்கள் பரம்பரைத் தொழிலான விவ சாயத்தில் ஈடுபடுகிறேன்'' என்றான்.

சிவசாமி கூறியது கேட்டு வேலு சாமியும், விமலாவும், அவள் கணவனும் மிகவும் மகிழ்ந்து போனார்கள்.



## 63. திருதராஷ்டிரன் வனம் செல்லுதல்

# மகாபாரதம்

தருமரும், மற்றவர்களும் கேட்ட கேள்விக்குக் கீரிப்பிள்ளை பதில் கூறலாயிற்று. ''ஆம். நான் கூறியது உண்மையே. இந்த யாக தானங்கள் அந்த சத்துமா தானத்திற்குச் சமம் ஆகவே ஆகாது. வயலில் சிதறிக் கிடக்கும் தானிய மணிகளைப் பொறுக்கி எடுத்து வந்து, குருக்ஷேத் திரத்திலிருந்த ஒரு பிராம்மணரும், அவரது மனைவி, மகன், மருமகள் ஆகியவர்களும் இந்த தானத்தால் சொர்க்க லோகத்தை அடைந்தார்கள். அவரால் தான் என் உடலின் பாதி தங்கமாக மாறியது.

நான் கூறிய பிராம்மணர் தினமும் பிச்சை எடுத்துத் தன் குடும்பத்தைப் போஷித்து வந்தார். அக்குடும்பம் ஒரு நாளில் ஒரு வேளை தான் உணவு உண்ண முடிந்தது. ஒரு முறை அப்பகுதியில் கடுமையான பஞ்சம் ஏற்பட்டது.

அக்குடும்பத்திற்கு உண்ண ஒரு வேளை உணவு கூடக் கிடைக்காமல் போயிற்று. ஒரு நாள் அவர்களுக்கு உண்ண ஒரு சிறிது தானியம் கிடைத்து விட்டது. அதை அவர்கள் மாவாக்கி, நான்கு உருண்டைகளாக்கி, ஆளுக்கு ஒவ்வொரு உருண்டையாகக் கையில்





எடுத்துக் கொண்டார்கள்.

அப்போது ஒரு பிராம்மணன் 'பசி' என்று துடித்தவாறே அந்தக் குடும் பம் இருந்த இடத்திற்கு வந்தான். வந்த விருந்தாளியை அக்குடும்பத் தலைவனான பிராம்மணன் வர வேற்று, தன்னிடமிருந்த சத்துமா உருண்டையை அவனுக்குக் கொடுத் தான். அப்போதும் தன் பசி அடங்க வில்லை என்று, வந்த பிராம்மணன் கூறவே, பிராம்மணனின் மனைவி தனது சத்துமா உருண்டையை அவ னுக்குக் கொடுத்தாள். அதனை உண்ட பிறகும், தன் பசி தீரவில்லை என்று அந்த பிராம்மணன் கூறவே, பிராம் மணனின் மகனும், மருமகளும் தமது உருண்டைகளைக் கொடுத் தனர். அவற்றைச் சாப்பிட்ட பின், அந்த பிராம்மணன் தன் பசி தீர்ந்த தாகக் கூறியதோடு, தான் எம தர்ம னென்றும், அவர்களைப் பரீட்சித்த தாகச் சொல்லி, அவர்கள் அனைவரை யும் சொர்க்கத்திற்கு அனுப்பினான்.

அப்போது நான் அங்கு சென்றேன், தரையில் சிதறிக் கிடந்த அந்த பிராம் மண குடும்பத்தின் சத்துமாவு என் உடலில் ஒட்டியதால், என் உடலின் அப்பகுதி தங்கமாகியது. இங்கும் பெரும் தானங்கள் நடைபெறுவதாகக் கேள்விப்பட்டு, என் உடலின் மற்ற பாதியையும் தங்கமாக்கிக் கொள்ள வந்தேன். ஆனால் நான் நினைத்தபடி நடக்கவில்லை.''

இவ்வாறு கூறி அந்தக் கீரி மாய மாய் மறைந்துவிட்டது. தருமா இத னால் மனம் தளர்ந்துவிடாமல் நியாயமாக ஆட்சி புரிந்து வந்தார். திருதராஷ்டிரனுக்கும், காந்தாரிக்கும் ஒரு குறைவும் வைக்காமல் அவர் களை கவனித்துக் கொண்டார்.

எந்த விஷயத்திலும், தருமர் திருதராஷ்டிரனைக் கலந்து ஆலோ சித்து வந்தார். ஆனால், பீமன் மட் டும் திருதராஷ்டிரனை வெறுத்தே வந்தான். இப்படியாகப் பத்து வரு டங்கள் கழிந்தன.

ஒரு நாள் திருதராஷ்டிரன் தரும ரிடம், ''தருமா! இதுநாள் வரை நீ என்னை நன்கு பாதுகாத்து வந்தாய். நானும் தங்குதடை இல்லாமல் பல தான தர்மங்களைச் செய்தேன். என் மகன்கள் நற்கதி அடைய எல்லாக் கிரியைகளையும் செய்து, திருப்தி அடைந்தேன். இனி இந்த வாழ்க்கை போதும். நான் வானப்பிரஸ்தத்தை

மேற்கொண்டு வனத்தில் போய் வாழ விரும்புகிறேன். என்னுடன் காந்தாரியும் வருகிறாள். எங்களை மகிழ்ச்சியுடன் காட்டிற்கு அனுப்பி வை'', என்று கூறினான்.



தருமரோ அதற்கு இணங்காமல், ''நீங்கள் காட்டில் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்போது நான் மட்டும் இங்கே சுக வாழ்வு வாழ்வதா? வனத்தில் உங்களுக்குச் சரியாக உண்ண எதுவும் கிடைக்காதே! எனவே, நாட்டை யுயுத்சுவிடம் ஒப்படைத்து விட்டு, நாங்களும் உங்களோடு காட்டிற்கு வந்துவிடுகிறோம்'' என்றார்.

திருதராஷ்டிரனோ, ''இது சரியல்ல. வயதான பிறகே வானப்பிரஸ்தம் ஏற்க வேண்டும். நீ பல ஆண்டுகள் ஆட்சி புரிந்த பிறகே வனவாழ்க்கையை மேற்கொள்ள முடியும். எனவே, முதியோர்களான எங்களைகாட்டிற்குப் போக அனுமதி கொடு'', என்றான்.

அப்போது வியாச முனிவர் அங்கு வந்து, தருமரிடம் திருதராஷ்டிரனை வனவாசம் மேற்கொள்ள விட்டு விடும்படிக் கூறினார். அதுகேட்டு தருமரும் அவ்வாறே செய்வதாகக் கூறினார்.

திருதராஷ்டிரன் வனத்திற் குப் போகும் செய்தி ஹஸ்தினாபுரம் முழுவதும் பரவியது. எனவே, மக்கள் அவனைக் காணக் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். அவர்களிடம், ''தருமன் நல்ல விதமாக ஆட்சி புரிவான். என் மகன் துரியோதனன் சில தவறுகளைச் செய்தான். அவற்றிற்கு நானும் உடந்தையாக இருந்து விட்டேன். அதனால் என்னை மன்னியுங்கள். என்னைக் காட்டிற்குப் போக அனுமதியுங்கள்'' என்று கேட்டுக் கொண்டான்.

அப்போது மக்களின் பிரதிநிதியாக ஒரு பிராம்மணன் முன்வந்து, ''உங்கள் வம்சத்தவர் நன்கு ஆட்சி புரிந்து எங்களைச் சுகமாகவே வைத்திருந்தார்கள். துரியோதனன் கூட எங்களுக்கு எந்த அநீதியும் இழைக்கவில்லை. அவன் பாண்டவர்கள் மீது கொண்ட பொறாமையால் அநாவசியமாக ஒரு போரை எங்கள் மீது திணித்தான். அதுதான் அவன் செய்த தவறு. அதனால் குரு வம்சமே அழிந்தது. தருமர் நல்லவர். நன்கு ஆட்சி புரிபவர். நீண்ட ஆயுளுடன் இருந்து அவர் ஆட்சி புரிய ஆசிகளை



அளிக்கிறோம்'', என்றார்.

மறுநாள் விதுரர் தருமரைக் கண்டு, ''திருதராஷ்டிரன் வனவாசம் போவதற்கு முன் பீஷ்மர் முதலான வர்களுக்கு சிரார்த்த கர்மாக்களைச் செய்ய விரும்புகிறான். அதற்குக் கொஞ்சம் பணம் தேவைப்படும்'' என்றான். தருமரும், அர்ஜுனனும் உடனே பணம் கொடுத்தார்கள்.

பீமன் மட்டும் திருதராஷ்டிரனுக் குப் பணம் கொடுக்காமல் இருக் கவே, தருமரும், ''சற்றும் தயங் காதே. இது நம் முன்னோர் நற்கதிக் காகச் செய்யப்படுவது. அதனால் தயங்காமல் பணம் கொடு'' எனவே, அவனும் கொடுத்தான்.

பணம் நிறையக் கிடைக்கவே, திருதராஷ்டிரன் எல்லோருக்கும் சிரார்த்தங்களைச் செய்தபின் தாரா ளமாக தான தர்மங்களைச் செய்தான். மறுநாள் திருதராஷ்டிரனும், காந் தாரியும் மரவுரி தரித்துக் காட்டிற் குக் கிளம்பத் தயாரானார்கள். அவர் களை வழியனுப்ப கௌரவர்களின் மனைவிகளும், குந்தி தேவியும், துரௌபதியும், சுபத்திரையும், பரீட் சித்து, உத்தரை, மற்றும் நகரத்துப் பெண்களும் சென்றனர். சஞ்சயனும், விதுரரும் திருதராஷ்டிரனுடன் காட் டில் வசிக்கத் தீர்மானித்து அவர் களோடு சென்றார்கள்.

திருதராஷ்டிரன் நகர எல்லை யைக் கடந்ததும், யுயுத்சுவையும், கிருபரையும் நகருக்குத் திரும்பிச் செல்லும்படிக் கூறினான். அப்போது தருமர் குந்தியிடம், ''அம்மா! நீங் களும் நகருக்குத் திரும்பிச் செல் லுங்கள். நான் பெரியப்பாவுடன் வனத்திற்குச் செல்கிறேன்'' என் றான். குந்தியோ, காந்தாரியுடன் வனத்தில் இருக்கத் தீர்மானித்திருந் தாள். அதனால் அவள் தருமரிடம், ''தருமா! இவர்கள் இருவரும் என் மாமனாருக்கும், மாமியாருக்கும் சம மானவர்கள். இவர்களுக்குப் பணி விடை புரிந்தவாறே, நான் கானகத் தில் இருக்கப் போகிறேன்'', என் றாள். பாண்டவர்கள் எல்லோரும் அவள் வனத்திற்குப் போகக் கூடாது என்று தடுத்தார்கள். ஆனால் குந்தி அவர்கள் சொன்னதை ஏற்கவில்லை. எனவே, பாண்டவர்கள் துரௌபதி யுடன் ஹஸ்தினாபுரத்திற்குத் திரும் பிச் சென்றார்கள்.

திருதராஷ்டிரன் மாலை வரை

நடந்துபோய் கங்கைக் கரையில் ஓர் இடத்தை அடைந்தான். அன்றிரவு படுத்துறங்க சஞ்சயனும், விதுரரும் தர்ப்பைப் புல்லால் படுக்கைகளைத் தயார் செய்து கொடுத்தார்கள். விது ரரின் யோசனையில் பேரில், திருத ராஷ்டிரன் இருக்க அங்கேயே ஒரு பர்ணசாலை அமைக்கப்பட்டது.

அங்கே கொஞ்சகாலம் திருதராஷ் டிரன் இருந்துவிட்டுப் பிறகு குரு க்ஷேத்திரத்திற்குச் சென்றான். அங்கே சதாயூ என்ற ராஜரிஷி ஆசிரமம் அமைத்துக் கொண்டு இருந்து வந்தார். அவர் தம் மகனிடம் நாட்டைக் கொடுத்துவிட்டு, வானப்பிரஸ்த ஆசி ரமம் மேற்கொண்டு அங்கு வந்தவர். திருதராஷ்டிரன் அவரோடு சேர்ந்து தவம் புரியலானான். குந்தி தேவி அவர்கள் யாவருக்கும் பணி புரிந்து வந்தாள். அங்கு வந்த பெரியோர்கள் பல கதைகளைக் கூற, அவற்றை எல்லாம் திருதராஷ்டிரன் கேட்டு வந்தான்.

திருதராஷ்டிரன் ஹஸ்தினாபுரத் திலிருந்து சென்ற பின், அந்நகர மக் கள் அவனைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். பாண்டவர் களும் அவனைப் பற்றிச் சிந்திக்காத நேரமே இல்லை என்றே கூறலாம். மேலும், குந்திதேவி காந்தாரியுட னும், திருதராஷ்டிரனுடனும் வனத் திற்குச் சென்றுவிட்டார். அது அவர் களைப் பெருந்துயரத்தில் ஆழ்த்தி விட்டது.

சகாதேவனோ, குந்திதேவியைப் பார்க்க வேண்டுமென்று துடியாய்த்



துடிக்கலானான். துரௌபதியும் தரு மரிடம், ''இங்குள்ள பெண்கள் யாவரும் குந்திதேவியையும், காந் தாரியையும் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறார்கள்'' என்றாள்.

தருமரும் உடனேயே யாவரும் திருதராஷ்டிரன் இருக்கும் ஆசிரமத் திற்குச் செல்வதற்கு வேண்டிய ஏற் பாடுகளைச் செய்தார். அவர்களோடு ஹஸ்தினாபுர வாசிகள் பலரும் செல் லத் தயாரானார்கள். எனவே, ஒரு பெரிய கூட்டமே திருதராஷ்டிரன் இருக்கும் ஆசிரமத்திற்குக் கிளம்பிச் சென்றது.

தேர்கள், குதிரைகள், ஒட்டகங்கள் எனப் பலவற்றில் மக்கள் ஏறிக் கொண்டு, ஹஸ்தினாபுரத்திலிருந்து கிளம்பினார்கள். யுயுத்சுவும், தௌம் யரும் மட்டும் அரண்மனையிலேயே

இருந்தார்கள்.

பாண்டவர்கள் வந்திருக்கிறார்கள் என்று அறிந்த அந்த ஆசிரமவாசிகள், அவர்களைக் காண வந்தார்கள். தருமர் அவர்களிடம், ''எங்கள் பெரியப்பா திருதராஷ்டிரர் எங்கே இருக்கிறார்?'' என்று கேட்டார்.

திருதராஷ்டிரன் குளித்துவிட்டு வர யமுனை நதிக்குச் சென்றிருப்பதாக அவர்களுக்குத் தெரிந்தது. பாண்டவர்கள் அவர்கள் கூறிய இடத்திற்குச் சென்றார்கள். அங்கு திருதராஷ்டிரனையும், காந்தாரியையும், குந்தி தேவியையும் கண்டார்கள். சகாதேவன் வேகமாக ஓடி, குந்தி தேவியின் கால்களில் விழுந்து வணங்கினான். அவளும் அவனை எழுப்பி கட்டித் தழுவி, காந்தாரியிடம் சகாதேவன் வந்திருப்பதாகக் கூறினாள்.

பாண்டவர்களும் அவர்களது மனைவி மக்களும், திருதராஷ்டிரனைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு பேசவே, அவன் தான் ஹஸ்தினா புரத்தில் இருப்பது போலவே உணர்ந்தான். பல முனிவர்கள், பாண்டவர்களைக் காண வரவே, சஞ்சயன் அவர்களை அறிமுகப்படுத்தினான். தருமர் திருதராஷ்டிரனின் உடல் நலன் விசாரித்தபின், ''விதுரரைக் காணவில்லையே. அவர் எங்கே?'', என்று கேட்டார். திருதராஷ்டிரனும், ''அவன் அன்ன ஆகாரம் இல்லாமல், உடல் மெலிந்து திகம்பரனாகிக் காட்டில் திரிகிறான்'' என்றான்.

இவ்வாறு திருதராஷ்டிரன் கூறிக் கொண்டிருக்கும் போதே தொலை தூரத்தில் விதுரன் வந்து கொண்டிருப்பதை தருமர் கண்டார். தருமர் ஓடிப்போய் விதுரனை வணங்கி, ''உங்களைக் காண ஓடோடி வந்திருக்கிறேன்'' என்றார்.

விதுரன் மிகவும் மெலிந்து போயிருப்பது கண்டு தருமரின் கண்களில் நீர் நிரம்பியது. அவர் விதுரரைப் பார்த்தார். அப்போது விதுரரின் உடல் கீழே சாய்ந்தது. அவரது உயிர் உடலைவிட்டுப் பிரிந்து விட்டதை தருமர் தெரிந்து கொண்டார். அவர் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்து விதுரர் இறந்து விட்டதை யாவருக்கும் தெரிவித்தார். அதுகேட்டு எல்லோரும் திகைத்து நின்றார்கள்.



இது அம்புலிமாமாவின் அன்பளிப்பு

3

# வீரதீர பராக்கிரமன்

ஓவியம் : பாணி

சந்திரபுர மன்னன் மகேந்திர தேவனின் முதலமைச்சர் திடீரென இறந்து போகவே, அவரது மகன். ஆதித்தனை மன்னன் குருகுலத்திலிருந்து வரவழைத்து, தன் ஆலோசகனாக நியமித்தான். நாட்டின் கொள்ளைக்காரர்களை ஆதித்தன் பிடித்து சிறையில் அடைத்தான். முதலமைச்சரின் நண்பரின் மகள் அருணா ஆதித்தனைக் கண்டு தன் தந்தையும், முதலமைச்சர் இறந்த அன்றே இறந்தார் எனக் கூறி ஒரு பெட்டியை அவனிடம் கொடுத்தாள். அதில் முதலமைச்சர் தன் கைப்பட எழுதிய ஒரு புத்தகம் இருந்தது ஆதித்தன் அதை எடுத்துப் படிக்கலானான்.

வினதா ஒரு பந்தயத்தில் கத்ரு விடம் தோற்றதால் தானும், அவளது மகனான கருடனும் கத்ருவுக்கும் அவளது மகன் களான நாகர்களுக்கும் பணியாட் களாக ஆகிவிட்ட நிலையை அவள் கருடனிடம் கூறினாள். கருடன் கத்ருவிடம் சென்று தன்னையும் தன் தாயையும் அடிமைத் தளையிலிருந்து விடுவிக்கக் கோரினான்.

நீ தேவ லோகத்திற்குப் போய் அமிர்தம் கொண்டு வந்து கொடுத்தால் தான் உனக்கும், உன் தாயாருக்கும் விடுதலை அளிப்பேன்.


கருடன் தேவலோகத்திற்குச் சென்றான். அமிர்த கலசத்தை இரு பயங்கரப் பாம்புகள் காவல் காத்துக் கொண்டிருந்தன. அவற்றைச் சுற்றி நெருப்பு இருக்க, தேவர்களும் அதைப் பாதுகாத்தனர். கருடன் அவர்களோடு போர் புரிந்து தோற்கடித்து, நெருப்பை அணைத்து, இரு பாம்புகளையும் கொன்றுவிட்டு, அமிர்த கலசத்தை எடுத்துக் கொண்டு பூவுலகத்திற்கு வந்தான்.
அதை அறிந்த இந்திரன் வஜ்ஜிராயுதத்தால் கருடனைத் தாக்கினான். அத்தாக்குதலில் கருடனின் இறக்கையின் ஒரே ஓர் இறகு மட்டும் கீழே விழுந்தது. கருடனை வெல்ல முடியாதென இந்திரன் கண்டு சமாதானம் செய்து கொண்டான்.
அமிர்தம் தேவர்களுக்கு மட்டுமே உரியது. அதை மற்றவர்களுக்குக் கொடுக்கக் கூடாது.




அமிர்த கலசத்தைக் கண்டு கத்ரு மகிழ்ந்து போனாள். கருடனுக்கும், அவனது தாய்க் கும் அப்போதே விடுதலையும் அளித்தும் விட்டாள். நாகர்கள் அமிர்த கலசத்தை அணுகும் போது, கருடன் அதைத் தூக் கிக் கொண்டு ஆகாயத்தில் பறந்தான்.




இந்திரனின் வஜ்ஜிராயுதம் தாக்கி விழுந்த கருடனின் இறகை இமயமலையிலிருந்த ஒரு முனிவர் கண்டார். அதை அவர் பூஜித்து, நம் முன்னோர்களிடம் ஒப்படைத்தார். அரசர் களான அவர்கள் யாவரும் அதனை பக்தி சிரத்தையுடன் பூஜித்தார்கள்.
அந்த இறகு நம் ஆறாவது தலைமுறை வீரனுக்கே கிடைக்கும். அவன் புகழ் பெறுவான். ஆதித்தா! நீ தான் அந்த ஆறாவது தலைமுறை அதிர்ஷ்டக்கார வீரன்.






தந்தையே! என் தாய்நாட்டின் விடுதலைக்காக நான் பாடு படுவேன்.


எனக்குப்பின் அதை அடைந்து, ஒவ்வொரு பௌர்ணமி யன்றும் அதை பக்தியுடன் பூஜை செய்து வா! அது உனக்கு மேலும் பலத்தையும் அபூர்வ சக்தியை யும் அளிக்கும். அச்சக்தியை நாட்டு மக்களின் நல னுக்காகப் பயன்படுத்து. கருடன் தன் தாய்க்கு விடுதலை வாங்கித் தந்தது போல, நீ உன் தாய் நாடான சந்திரபுரிக்கு வரும் இன்னல்களைப் போக்கு. நாட்டில் பல துஷ்ட சக்திகள் என்னை எதிர்த்து செயல்படு கின்றன. நான் அதிக நாட்கள் உயிர்வாழ மாட்டேன். ஆதித்தா! கருட பகவான் உன்னைக் காப்பார்.

(தொடரும்)



# குரங்கு மனம்

ஒரு குடியானவன் தன் நிலத்தில் ஏர் கொண்டு உழுது கொண்டிருக்கும் போது ஏர் நுனி ஒரு பித்தளைக் குடத்தின் மீது படவே, 'டங்'கென ஒலி கிளம்பியது.

அவன் அந்த இடத்தைத் தோண்டி, அக்குடத்தை எடுத்துப் பார்த்த போது, அது நிறையத் தங்க நாணயங்கள் இருப்பதைக் கண்டான். அதைக் கண்ட அவன் அதை எவ்வாறு பத்திரப்படுத்தி வைப்பது என்று யோசிக்கலானான்.

சற்று தூரத்தில் கிராம அதிகாரி வருவது கண்டு, அவரிடம் அதை ஒப்படைக்கலாமா என்று யோசித்தான். உடனே அவன் ஓடிப்போய் அவரிடம், ''தயவு செய்து ஒரு நிமிடம் வயலுக்கு வந்துவிட்டுப் போகிறீர்களா?'' என்று கேட்டான். அவரும் அவனோடு வயலுக்கு வரலானார். அப்போது குடியானவனின் மனம் அந்த தங்க நாணயங்களைத் தானே வைத்துக் கொண்டு விட வேண்டுமென எண்ணியது.

அதனால் அவன் ஏரில் பூட்டிய தன் இரு எருதுகளைக் காட்டி, ''இவற்றில் எது உயர்ந்தது என்று சொல்லுங்கள். இவ்விஷயத்தில் நீங்கள் நல்ல அனுபவஸ்தர் ஆயிற்றே'', என்று கேட்டான். அவரோ-''இதைக் கேட்கவா என்னைக் கூப்பிட்டாய்?'', என்று சொல்லி அவனை முறைத்துப் பார்த்துவிட்டு போய்விட்டார்.

அதற்குப் பின் அக்குடியானவன் அந்தக் குடத்தை யாருக்கும் தெரியாமல் எடுத்துப்போய், எங்கே ஒளித்து வைப்பது என்று யோசித்தான். ஒரு வழியும் தெரியாததால் சூரியன் மறையும் வேளைக்கு அவன் தன் வீட்டிற்குப் போகலானான். அப்போதும் வழியில் கிராம அதிகாரி தென்படவே அவரிடம் சென்று,

– சுதா சுவாமி –

''நீங்கள் ஒரு முறை என் வயலுக்கு வந்துவிட்டுப் போகிறீர்களா?'' என்று கேட்டான். இம்முறை வயலில் ஏதோ விபரீதம் நடந்திருக்கிறதென அவர் நினைத்து, அவனுடன் அவனது வயலுக்குச் சென்றார்.

கிராம அதிகாரியிடம் பணத்தை ஒப்படைத்து விடலாம் என எண்ணிய அவனது மனம் வழியில் நடக்கும் போது மாறிவிட்டது. அதனால் வயலில் அடி எடுத்து வைத்ததும், நிலப்பரப்பைக் காட்டி, ''நான் வயலை உழுதது சரி தானா என்று சொல்லுங்கள்'', என்று கேட்டான். கிராம அதிகாரி அவனைப் பார்த்து, ''இதைக் கேட்கவா என்னை இங்கே அழைத்து வந்தாய்! போடா. போ, பைத்தியமே!'', எனக் கூறிவிட்டுப் போய்விட்டார்.

அவர் போனபின் அவன், ''இக் குடத்தை எங்கே கொண்டு போய் மறைத்து வைக்கலாம்?'' என்று யோசித்தான்.

முடிவில் சாக்குப் பைக்குள் அதைப் போட்டுக் கட்டி எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்கே சென் றான். அவன் தன் மனைவியிடம், ''நீ இந்த எருதுகளைக் கொண்டு போய்க் கொட்டிலில் கட்டி, அவற்றிற்குத் தீவனம் வை. நான் இப்போதே போய் கிராம அதிகாரியைப் பார்க்க வேண்டும்'' என்றான்.

அவன் மனைவியோ தன் கணவன் ஏதோ மூட்டையை எடுத்து வந்ததைக் கண்டு, அதில் ஏதோ ரகசியம் உள்ளது என்று ஊகித்துவிட்டாள். அதனால்



அவள் ''எருதுகளுக்கு என்னால் தீவனம் வைக்க முடியாது. என்னை அவை முட்டித் தள்ளிவிடும். நீயே தீவனம் வைத்துவிட்டு, எங்கே வேண்டுமானாலும் போய்விட்டு வா!'', என்றாள்.

குடியானவன் வேறு வழி இல்லாமல் மூட்டையைக் கீழே வைத்துவிட்டு, எருதுகளைக் கொட்டிலுக்கு ஓட்டிச் சென்றான்.

அவன் மனைவி உடனே அவன் வைத்த மூட்டையை அவிழ்த்துப் பார்த்தாள். அதில் ஒரு பித்தளைக் குடமும், அது நிறையத் தங்க நாணயமும் இருப்பது கண்டு, அதை எடுத்து ஓரிடத்தில் வைத்துவிட்டு, அதே அளவுள்ள ஒரு பாறாங்கல்லை அதில் வைத்துக் கட்டிவிட்டாள்.

கொட்டிலிலிருந்து திரும்பிய

குடியானவன் கீழே இருந்த மூட்டை யைத் தூக்கிக் கொண்டு, கிராம அதிகாரியைப் பார்க்கச் சென்றான்.

அவர் முன் அந்த மூட்டையை வைத்து, "இது உங்களுக்குக் கொடுக் கும் பரிசு", என்றான். கிராம அதிகாரி பையில் இருந்த பாறாங்கல்லைப் பார்த்துத் திகைத்துப் போனார். அவ ரோடு குடியானவனும் திகைத்தே போனான்.

இதில் ஏதோ ரகசியம் உள்ளதென கிராம அதிகாரி குடியானவனை ஓர் அறையில் அடைத்து, இருவரைக் காவலுக்கு வைத்தார்.

குடியானவன் அவ்வப்போது கை காட்டி, "இவ்வளவு பெரிது, இவ் வளவு உயரம். அது நிறைய தங்கம்" என உளறலானான். அதை அப் படியே அந்தக் காவலாளிகள் கிராம அதிகாரியிடம் போய்ச் சொன்னார் கள். கிராம அதிகாரி குடியானவனை வரவழைத்து, அவன் கூறியவற்றிற்கு என்ன பொருள் என்று கேட்டார்.

குடியானவனும், "உங்கள் தலை குடம் போல. உங்கள் உயரம் இவ்வளவு. நீங்கள் தங்கமானவர் என்று கூறினேன்", என்றான். கிராம அதிகாரியோ, "இந்தக் கிறுக்குப் பயலைத் தூக்கில் போடுங்கள்" என்று கட்டளையிட காவலாளிகள் அவனை இழுத்துச் சென்றனர்.

அப்போது அவன் கிராம அதி காரியிடம், "இவர்களைத் தூக்குக் கயிறின் முடிச்சைப் பலமாகப் போடச் சொல்லுங்கள். இல்லா விட்டால் என் உயிர் போகாது", என்றான்.

அதுகேட்டு அவர், "இவன் பைத் தியம் காலையிலிருந்து ஏதேதோ உளறிக்கொண்டே இருக்கிறான் இவ னைத் தூக்கில் போட வேண்டாம் விட்டுத் தொலையுங்கள்" எனவே, குடியானவன் விடுதலை செய்யப் பட்டான்.

அவன் வீடு திரும்பி, மனைவி சொற்படி கேட்டுச் சுகமாக வாழ்ந்து வந்தான்.






### சிறுவர்கள் கலந்து கொள்ள விடும் அழைப்பு

# சிறுவர் சிறப்பிதழ்

### (நவம்பர் 2001 இதழ்)

**இளம் எழுத்தாளர்களுக்கு** :– நீங்களே சிந்தித்து எழுதிய கதைகளை 300லிருந்து 500 சொற்களுள் இருப்பதாக அனுப்பலாம். நல்ல தலைப்புடன், புதிர்கள், விடுகதைகள் அல்லது நகைச்சுவை துணுக்குகள் ஆகியவற்றையும் மூன்றுக்கு மேற்படாமல் ஒருவரே அனுப்பலாம். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், குஜராத்தி, மராத்தி, ஒரியா, வங்காளி, ஹிந்தி, ஆங்கிலம் ஆகியவற்றில் எந்த மொழியிலும் எழுதி அனுப்பலாம். உங்கள் கதைகளுக்குச் சித்திரம் வரைந்து கொடுக்க யாராவது உங்கள் நண்பர் இருந்தாலும், அவற்றையும் கதைகளோடு சேர்த்து அனுப்பலாம். அவை நன்றாக இருந்தால் நாம் உம் நண்பரை சென்னைக்கு எம் செலவில் வரவழைத்து போட்டி முடியும் வரை வசதிகள் அளிப்போம்.

**இளம் ஓவியர்களுக்கு** :– இந்தியப் புராணங்களிலிருந்தோ, வரலாற்றிலிருந்தோ சித்திரங்கள் வரைந்து அவற்றை விளக்கும் சிறு குறிப்புகளை அனுப்பலாம். ஒருவர் மூன்று சித்திரங்களுக்கு மேல் அனுப்பக் கூடாது. அவற்றை நன்றாக வரைந்திருக்கிறார்கள் என நாம் கருதுபவர்களை சென்னைக்கு வரச் சொல்லி, எம் சிறப்பு மலரில் வெளியிடப்போகும் கதைகளுக்கோ, சிறப்புப் பகுதிகளுக்கோ ஓவியம் தீட்டுமாறு கூறுவோம்.

### முடிவு தேதி : ஜூன் 7, 2001

**பரிசுகள்** :– திறமையான படைப்புகளுக்குக் கவர்ச்சிகரமான பரிசுகள் உண்டு.
**போட்டோ** :– நீங்கள் அனுப்பும் படைப்புடன் பாஸ்போர்ட் அளவு போட்டோ ஒன்றையும் இணைத்து அனுப்பவும்.

**பெயர்** :.............................................................**வயது / பிறந்த தேதி** :...........................

**வகுப்பு** :............ **பள்ளி** : ..............................................................................

**வீட்டு முகவரி** : ..............................................................................

..............................................................................................

.............................................................. **பின்கோடு** :....................................

**படைப்பு பற்றிய விவரங்கள்** :–

1. .........................................................
2. .........................................................
3. .........................................................

மேற்குறிப்பிடப்பட்ட படைப்புகள் என் மகனால்/மகளால் யாருடைய உதவியுமின்றி சுயமாகச் சிந்தித்துப் படைக்கப்பட்டவை. தேர்ந்தெடுக்க இதன் எல்லா உரிமைகளும் சந்தமாமா நிறுவனத்திற்கே சொந்தம் என்றும் இதை அச்சிலோ, மின் சாதனங்களிலோ, எம் மொழியிலும் அவர்கள் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதற்கும் ஒப்புதல் அளிக்கிறேன்.

..................................... ..................................

பங்கேற்பவரின் கையொப்பம் பெற்றோரின் கையொப்பம்

# லஞ்சமா, பலமா?

ஒரு முறை அடுத்தடுத்த வயல்களின் சொந்தக்காரர்களான பொன்னனுக்கும் சின்னானுக்கும் வயலுக்கு நீர் பாய்ச்சும் விஷயத்தில் தகராறு ஏற்பட்டது. வாய்ச்சண்டை கைச்சண்டையாக மாற, பொன்னன் சின்னானை நன்கு அடித்து விட்டான். அப்போது சின்னான் ''பொன்னா! நீ என்னை விட பலசாலி என்பதால் என்னை அடித்துவிட்டாய். நான் கிராம அதிகாரியிடம் புகார் செய்து உன்னை என்ன செய்கிறேன் பார்!'' என்று கத்தியவாறே ஓடினான்.

சின்னான் நேராக கிராம அதிகாரியிடம் சென்றான். அந்த அதிகாரி கூசாமல் லஞ்சம் வாங்குபவன். அதிகப்பணம் லஞ்சமாகக் கொடுப்பவருக்கு அனுசரணையாக அவன் தீர்ப்புக் கூறுபவன். சின்னான் தன்னை பொன்னான் அடித்ததை விவரமாகக் கூறினான். அந்த அதிகாரியும் சட்டைப் பையிலிருந்து ஒரு ரூபாய் நாணயத்தை எடுத்துப்போட்டு ''ஐம்பது, ஐம்பது,'' எனச் சொன்னான்.

அவனது எண்ணத்தைப் புரிந்து கொண்ட சின்னான் மறுவார்த்தை பேசாமல் திரும்பி வந்தான். அவன் பொன்னனிடம் ''பொன்னா! நீ உன் பலத்தைக் காட்டினாய். அது நாலு அடிகளோடு நின்றது. ஆனால் கிராம அதிகாரியோ அதிகார பலத்தால் ஐம்பது ரூபாய் லஞ்சம் கேட்கிறான். அதற்கு எங்கே போவேன்! நாமே அடிதடியில் இறங்காமல் சமாதானமாகப் பேசித் தீர்த்துக் கொள்ளலாம்'' என்றான்.



சிறுவர் சிறுமியரை
சிரிக்கவும், சிந்திக்கவும் தூண்டும்
பல நிகழ்ச்சிகளை வழங்குகிறது






உங்கள் குடும்ப சேனல்



## KIDS-Q

திங்கள்தோறும் மாலை 6 முதல் 6.30 மணிக்கு

குழந்தைகளின் பொது அறிவினை வளர்க்கும் நிகழ்ச்சி



## வால் பசங்க



செவ்வாய்தோறும்
மாலை 6 முதல் 6.30 மணிக்கு

குழந்தைகளின் லூட்டியை பகிர்ந்து கொள்ளும் நிகழ்ச்சி




## Kids News

புதன்தோறும் மாலை 6 முதல் 6.30 மணிக்கு

சிறுவர் சிறுமியரின்
அறிவை மேம்படுத்தும்
அறிவியல்பூர்வமான
செய்தித் தொகுப்பு







# வாண்டுகள் ராஜ்யம்

**வியாழன்தோறும் மாலை 6 முதல் 6.30 மணிக்கு**

## குழந்தைகளுக்கு நீதிபோதனை சொல்வதுடன், பல இடங்களையும் சுற்றி காட்டும் நிகழ்ச்சி



# இளைய மேதைகள்

**வெள்ளிதோறும்**
**மாலை 6 முதல் 6.30 மணிக்கு**





## குழந்தைகளின் திறமையை வெளிப்படுத்தும் நிகழ்ச்சி



உங்கள் குழந்தையும் ஜெயா டிவியின் சிறுவர் நிகழ்ச்சியில் கலந்து கொள்ள விருப்பமா? கீழ்கண்ட கூப்பனை பூர்த்தி செய்து, பாஸ்போர்ட் சைஸ் போட்டோவுடன் இணைத்து எந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ள விருப்பம் என்பதையும் ☑ செய்து **ஜெயா டிவி, சிறுவர் நிகழ்ச்சிப் பிரிவு, 48, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை** என்ற முகவரிக்கு அனுப்பவும்.

☐ Kids Q ☐ Kids News ☐ இளைய மேதைகள் ☐ வால் பசங்க ☐ வாண்டுகள் ராஜ்யம்

பெயர் ______________________ வயது __________

த/பெயர் ______________________________

முகவரி ______________________________

______________________________

குழந்தையின் திறமை ______________________

# நம் இந்தியா

## வினாக்கள்

உங்களில் பலர் தபால் தலைகள், நாணயங்கள் சேகரிப்பதைப் பொழுது போக்காகக் கொண்டிருப்பீர்கள். அவை பற்றிய வினாக்களே இவை.

1) முதலாவது சுதந்திர இந்தியத் தபால் தலையில் என்ன படம் உள்ளது?
2) யாருடைய உருவப்படம் சுதந்திர இந்தியாவின் தபால் தலையில் முதலில் பதிக்கப்பட்டது?
3) ஜனவரி 2001ல் ஓர் இந்தியத் தலைவரின் படம் கொண்ட தபால் தலை வெளியிடப்பட்டது. அத்தலைவர் யார்?
4) இந்தியாவில் முதலாவது தபால் தலை எப்போது வெளியிடப்பட்டது?
5) எந்த ஆண்டில் சித்திரங்கள் கொண்ட தபால் தலையை இந்தியா வெளியிட்டது? அது எப்போது?
6) இந்தியா தான் விமானத்தில் தபாலை அனுப்பிய முதல் நாடு. எப்போது, எங்கு இது முதலில் தொடங்கியது?
7) நாம் முகவரியில் பின்கோடை எழுதுகிறோம். இதன் முழு வடிவம் என்ன? இம்முறை இந்தியாவில் எப்போது புகுத்தப்பட்டது?
8) பின்கோடு முறையில் இந்தியா எவ்வளவு பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது?
9) இந்தியாவில் தனிப்பட்டோரின் தபால் பணி நிறுவனங்கள் இருந்தன. பிரிட்டிஷ் அரசாங்கம் எப்போது இவற்றை ஒழித்தது?
10) இந்தியத் தபால் தலையில் மிக உயர்வு பெற்றது எது? அது ஏன்?
11) உலகில், பல நாடுகள் ஓர் இந்தியத் தலைவரின் படம் கொண்ட தபால் தலைகளை வெளியிட்டுள்ளன. அத்தலைவர் யார்?
12) தபால் தலை தேசிய அருங்காட்சியகம் எங்கே உள்ளது?

## *மார்ச் வினாக்களின் விடைகள்*

1. மேவார் அரச குமாரி மீரா.
2. பக்த சூர்தாஸ்.
3. சைதன்ய மகாபிரபு 16-17 நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர்.
4. துவாரகை, ஜோதிர்மடம், காஞ்சிபுரம், புரி, சிருங்கேரி.
5. அவ்வையார்.
6. கபீர்தாஸ். 16-17வது நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர்.
7. சீர்தி சாய் பாபா.
8. ராமானுஜர்.



வாக்கியங்களை எழுதுங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஜூலை 2001 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.



வாழ்த்துக்கள்

மார்ச் 2001 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர்:

எஸ். மோகன்
*1283/7, ஆர். கே. புரம்,*
*புதுடில்லி – 110022.*

பரிசு பெற்ற வாக்கியங்கள்



வன வளர்ச்சி செய்யுங்கள்
உடற்பயிற்சி செய்யுங்கள்







பள்ளியில் அனைவரையும்
விரல் நுனியில் ஆட்டிப்
படைக்கிறேன்!!

பயமூட்டும்
விரல்
பிராங்கிஸ்!




இச்சலுகை 32 கிளாஸ் ரஸ்னா ஸாஃப்ட் டிரிங்க் கான்சன்ட்ரேட் பேக்குகளுக்கு மட்டுமே கிடைக்கும்.
இருப்புக்கள் தீரும் வரையே இச்சலுகை.
இச்சலுகை இல்லாமலும் பேக்குகள் கிடைக்கின்றன.






For more Pranky fun visit: www.gogokid.com

Mudra:RASNA:366/CHN/Tam.